# 'அவரா லேசில் திருப்தியடைகிறவர்...'

'அதுவும் துணி விஷயத்திலா? அதெங்கே...' என்கிருர் பம்பாய்வாசியான ஸ்ரீமதி ஆர். ஆர். பிரபு. 'இப்போல்லாம் ஸன்லைட்டாலே வெளுக்கறேன் அவரோட துணிக எல்லாத்தையும். அவருக்கோ பெருமை! எனக்குந்தான். இருக்காதா? அமோகமா நுரைகட்டுது ஸன்லைட், தொட்டதெல்லாம் பளிச்சுன்னு வெளுப்பு. சலவைன்னு எனக்கு வேண்டியது ஸன்லைட்தான்!'

துணிகளைக் காப்பதற்குத் தூய, வெண்மை வாய்ந்த ஸன்லைட் டைப் போல் வேறொன்றில்லை என்பதே குடும்ப மாதர்களின் துணிவு. அதுவே உங்களுக்கும் இனிது.

# ஸன்லைட்




ஸன்லைட் அருமை -- நம் துணிகளுக்கு நன்மை!

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

30-X52 TM

# எந்த இந்திய மொழியிலும்

## தந்தியை அனுப்பலாம்



**ஆனால் தந்திச் செய்தி தேவநாகரி எழுத்தில் எழுதியிருக்க வேண்டும்**

ஆங்கிலத்தில் அனுப்பப்படும் வாழ்த்துத் தந்திகள் (இந்தியில் வாழ்த்து வாக்கியங்கள்), டெலெக்ஸ் தந்திகள், பத்திரிக்கைச் செய்தித் தந்திகள், உயிருக்கு ஆபத்தான செய்திகள் அடங்கிய அவசரத் தந்திகள், போனேகிராம்கள், சுருக்கமான தந்தி விலாசங்களை பதிவு செய்து கொள்ளுதல் போன்ற தந்தி வசதிகள் தற்போது தேவநாகரி எழுத்தில் எழுதப்பட்டவைகளுக்கும் கிடைக்கின்றன. இவ்வசதி ஏறக்குறைய 1,500 தந்தி காரியாலயங்களில் கிடைக்கிறது.

**இந்திய மொழி தந்தி வசதியை பயன்படுத்திக்கொள்ளுங்கள்**



## உங்களுக்கு சிறந்த முறையில் சேவை செய்ய எங்களுக்கு உதவுங்கள்

தபால் மற்றும் தந்தி இலாகா

பிலவ, ஆவணி 18




செப்டம்பர் 3, 1961


# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 21

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 5

# சர்தார் வேதரத்தினம் மறைந்தார்

சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்கள் காலமான செய்தி தமிழகத்துக்குப் பலத்த இடிபோல் வந்தது. அவரைப் போன்ற தேசபக்தியும், சீலமும், ஒழுக்கமும், இனிய பண்பும், செயல் திறமையும் கொண்ட ஒருவரைக் காண்பது அரிது. அவரது மறைவு ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும்.

சர்தார் வேதரத்தினம் பிள்ளை என்று சொன்னவுடன் யாருக்கும் வேதாரண்ய உப்பு சத்தியாக்கிரக நாட்கள்தான் நினைவுக்கு வரும். அந்தச் சமயத்தில் அவர் ராஜாஜிக்குத் துணை நின்று செய்த சாகஸச் செயல்களையும் தியாகங்களையும் தமிழுலகம் இன்றும் போற்றிப் பேசி வருகிறது.

அவர் லட்சிய காந்தியவாதி. அவர் உள்ளம் காந்திய நிர்மாணத் திட்டங்களிலேயே நின்றது. எளிய வாழ்க்கை நடத்துதல், நூல் நூற்றல், ஆதாரக் கல்வி முதலிய பல பணிகளை மேற்கொண்டு திறம்பட நடத்தி வந்திருக்கிறார். வேதாரண்யத்தில் கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம், தாயுமானவர் ஆதாரப் பயிற்சிப் பள்ளி என்று பல ஸ்தாபனங்கள் தோற்றுவித்துத் திறம்பட வேலை செய்து வந்தார். அவரை இழந்த அந்த ஸ்தாபனங்களில் படிக்கும் மாணவர்களும் மாணவிகளும், பணியாற்றும் ஆசிரியர்களும் ஆசிரியைகளும் தந்தையை இழந்த குழந்தைகள்போல் அல்லலுறுவார்கள். அவர்களுக்கு ஆண்டவன் தைரியமும் ஊக்கமும் அருள்வாராக.

காந்திய நிர்மாணப் பணிகளில் பற்றுள்ளவராயினும் சட்டசபைப் பிரவேசத்தில் நம்பிக்கை இல்லாதவர் அல்ல. அவர் 1937ல் சட்டசபையில் இருந்தார். இப்பொழுதும் சட்டசபையில் இருந்து தொண்டாற்றி யிருக்கிறார். சட்டசபையில் தரமான கேள்விகள் யாராகிலும் கேட்கிறார்கள் என்றால் அது சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்கள்தான்.



காந்தியக் கொள்கைகளில் ஈடுபட்டும் தேசபக்தியினால் உந்தப்பட்டும் அன்று காங்கிரஸ் போராட்டத்தில் சேர்ந்தார். அன்று முதல் கடைசிமூச்சுவரை உண்மையான காந்திய காங்கிரஸ்வாதியாக இருந்தார். ஆனால் சுதந்திரத்துக்குப் பிறகு, காங்கிரஸ் போகிற போக்கு அவருடைய உள்ளத்துக்கு வேதனை அளித்தது.

ராஜாஜி சுதந்திரக் கட்சி ஆரம்பித்தபோது, அவர் உள்ளம் முழுதும் ராஜாஜியின் பக்கம் நின்றது. ஆனால் ராஜாஜி மேற்கொண்டுள்ள காரியம் மிகச் சிரமசாத்தியமான காரியமாயிற்றே என்று யோசித்தார். மேலும் காங்கிரசுக்குள்ளிருந்தே எச்சரிக்கை செய்யலாம் என்று அப்போது முடிவுகட்டினார். தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கட்சி, இடித்துக் கூறும் ஒரு நல்ல நண்பரை இழந்து விட்டது!

# பஞ்சாபி ஸூபா விஷயம்

பஞ்சாபி சீக்கியர்களின் தலைவர் மாஸ்டர் தாராசிங் அவர்கள் இதை எழுதும் போது பதினெரு நாட்களாகப் பட்டினி இருந்து வருகிறார். இதை நிறுத்துவதற்காக ஸந்த் பத்தே சிங் பிரதமர் நேருவுடன் நிகழ்த்திய சம்பாஷணை எவ்வித மாறுதலையும் ஏற்படுத்தாமல் முறிந்தது என்ற செய்தி கேட்டுப் பாரத மக்களின் கவலை அதிகரித்துள்ளது.

மாஸ்டர் தாராசிங், இவ்வுண்ணாவிரதத்தினால் காலமாக நேர்ந்தால், அது பஞ்சாபின் அமைதிக்கும் பாரத நாட்டுக்கும் பெருத்த ஹானியாக முடியும். சீக்கியர்கள் அனைவருடைய மனக்கசப்பைச் சம்பாதித்துக் கொண்டதாக முடியும். பஞ்சாபிலுள்ள சீக்கியர்கள் மட்டுமல்ல; உலகில் எங்கெங்கு சீக்கியர்கள் இருக்கிறார்களோ, அவர்கள் அனைவருடைய மனக் கசப்பையும் தேடிக் கொண்டதாகும்.

எல்லை மாகாணமாகிய பஞ்சாபில் அமைதியும் ஒற்றுமையும் இருக்கவேண்டுமானால் பிடிவாதமல்ல வழி. சீக்கியர்கள் அனைவரும் அடக்குமுறைக்கு ஆளாகி மனக்கசப்புக் கொண்டார்களானால் பஞ்சாப் மாகாணம் எவ்வாறு பலம் பெறும்? சீக்கியர்களுடைய வீர சரித்திரத்தையும் அவர்கள் அறிந்து சமுதாயத்துக்குச் செய்திருக்கும் நன்மையையும் கருதி அறிந்து சமுதாயமும் அரசாங்கமும் சாமர்த்தியமாக நடந்து கொள்ள வேண்டும்.

# ரிஸர்வ் பாங்கியின் எச்சரிக்கை

ஜுரமடித்தால் எவ்வளவு கடுமையாக இருக்கிறது என்பதை தெர்மாமீட்டர் வைத்துப் பார்த்துத் தெரிந்து கொள்ளுகிறோம். அதேபோல் நாட்டின் நிலைமை எப்படியிருக்கிறது என்பதை அவ்வப்போது சர்க்கார் எழுப்பும் கடன்களுக்குப் பொதுமக்கள் அளிக்கும் ஆதரவை வைத்துக் கணித்துவிடலாம்.

'சமீபத்தில் சர்க்கார் எழுப்பிய கடன்களுக்கு மக்கள் செலுத்திய தொகை மிக மிகக் குறைவு. இது நாட்டின் நிலை சீராக இல்லை என்று எடுத்துக் காட்டுகிறது' என்று ரிஸர்வ் பாங்கு கவர்னர் மத்திய சர்க்கார் நிதிமந்திரிக்கு எச்சரிக்கை செய்திருக்கிறார். நிதிமந்திரி இந்த எச்சரிக்கையைப் பிரதம மந்திரிக்கு அனுப்பி வைத்து விட்டார்!

சென்ற சில ஆண்டுகளாக, சர்க்கார் கடைப் பிடித்துவரும் கொள்கைகளினாலும் காரியங்களினாலும் வரிப் பளுவினாலும் மக்களிடம் சேமிக்கும் வாய்ப்போ ஆசையோ, புதுத் தொழில்களில் முதலீடு செய்து, பணத்தை விருத்தி செய்ய வேண்டும் என்ற உற்சாகமோ இல்லை என்று சுதந்திரக் கட்சித் தலைவர்களும் மற்றுமுள்ள பொருளாதாரப் பண்டிதர்களும் எச்சரிக்கை செய்து வந்தார்கள். அப்போது அவர்களைப் பிற்போக்குவாதிகள் என்றார் நேருஜி. 'பிற்போக்குவாதிகள்' எதிர்காலத்தை உய்த்துணரும் தன்மை பெற்றவர்கள் என்பதை ரிஸர்வ் பாங்கியின் எச்சரிக்கை நிரூபித்திருக்க வேண்டும். இப்பொழுதாவது தங்களுடைய திட்டங்கள் முற்றும் தவறானவை என்ற உணர்ச்சி ஏற்பட்டுத் திருத்திக் கொள்ள வேண்டும். ஆனால் இன்று ஆளும் பீடத்தில் இருப்பவர்களுக்கு அந்த உணர்ச்சி ஏற்படும் என்ற நம்பிக்கை இல்லை. "இவர்கள் நாட்டை அதல பாதாளத்தில் வீழ்த்திவிட நிச்சயம் கொண்டிருக்கிறார்கள். இவர்களிடமிருந்து தப்ப வேண்டும்" என்று மக்கள் உறுதி செய்து கொண்டு, வரும் தேர்தலில் ஒரு பாடம் கற்பிக்க வேண்டும். அதைத் தவிர வேறு வழியில்லை.

# கடன் கொடுத்தார் நெஞ்சம்

செப்டம்பர் மாதத்தில் யுகாஸ்லேவியாவின் தலைநகரான பெல்கிரேடில் கூட விருக்கும் நடுநிலைமை வகிக்கும் நாடுகள் மகாநாட்டில் கலந்து கொள்ளப் பிரதமர் நேரு போகிறார்.

உலகத்திலுள்ள முப்பது நாடுகளின் பிரதிநிதிகள் அங்குகூடப் போகிறார்கள். ஆசியாவிலிருந்தும், ஆப்பிரிக்காவிலிருந்தும் புதிதாகச் சுதந்திரம் பெற்ற பல நாடுகள் அங்கு வரப்போகின்றன. இந்

நாடுகள் கூடி ஏதாகிலும் தீர்மானம் செய்தால் அது எந்த அளவுக்கு வல்லரசுகளைப் பாதிக்கும், கட்டுப்படுத்தும் என்பது சந்தேகத்துக்குரிய விஷயமாகும். இருப்பினும் இம்மகாநாட்டில் பாரதம் கலந்துகொள்ள முடிவு செய்துவிட்டது. இப்போது நமது நடுநிலைமை எந்த அழகில் இருக்கிறது என்பதை இந்தியா, நேபாளத்திடம் நடந்து கொண்ட விதத்தை வைத்துப் புரிந்து கொண்டு விடலாம்.

இல்லி மக்கள் சபையில் பிரதமர் நேரு, வெளிநாட்டுக் கொள்கை சம்பந்தமாகப்



பேசிய போது நேபாளத்தைக் குறிப்பிட்டுப் பின்வருமாறு பேசினார்.

"இந்தியா எவ்வளவு உதவி செய்கிறது என்பதைப் பல நாடுகள் மறந்து விடுகின்றன. நேபாள மன்னர்கூட, இந்தியா அவருடைய நாட்டுக்குச் செய்துள்ள உதவித் தொகையைக் கேட்டு ஆச்சரியப்பட்டுப் போனார்."

இந்தியாவின் நிலையே இன்று அந்நிய நாடுகளில் கடன் வாங்கிப் பிழைக்கும் படியாயிருக்கிறது. இந்நிலையில் ஏதோ கொஞ்சம் நேபாளத்துக்கு இந்தியா உதவியது என்றால், அதற்குத் தக்க நன்றியுணர்ச்சி நேபாளம் காட்டவில்லை என்று ஏங்குகிறார் பாரதப் பிரதமர். இது கடன் கொடுத்தவர்களின் மனப்பான்மை.

**ப**ல்லாயிரம் கோடி டாலர்களும், ரூபிள்களும், மார்க்குகளும், யென்களும் உலகில் ஒரு நாடு பாக்கியில்லாமல் கடனாகவும் தானமாகவும் கேட்டுப் பெற்று வருகிறோமே; அந்நாடுகள் நம்மைப் பற்றி மேற்கண்டவாறு எவ்வளவோ குறைகள் சொல்லலாமல்லவா? அதற்கு இடம் ஏற்படுத்திக் கொடுத்து விட்டோமல்லவா?

"இரண்டாவது திட்ட காலத்தில், பாரதம் நேபாளத்துக்குப் பதினொரு கோடி ரூபாய் செலவழித்திருக்கிறது மூன்றாவது திட்ட காலத்தில் பதினெட்டு கோடி ரூபாய் செலவழிக்கப் போகிறது. இதைத் தவிர கோஸி நதி நீர்ப்பாசனத் திட்டம், மின்சாரத் திட்டங்களுக்கு 44 கோடி ரூபாயும் கண்டக் நதித் திட்டத்துக்கு 55 கோடி ரூபாயும் செலவிட்டு வருகிறது. இவையெல்லாம் நாம் தொடர்ந்து செய்து வருகிறோம். சமீபத்தில் நேபாளத்தில் ஏற்பட்ட அரசாங்க மாறுதல்கள் நமக்குப் பிடிக்கவில்லையாயினும் மேற்கண்ட உதவிகளைத் தொடர்ந்து செய்து வருகிறோம்" என்று பிரதமர் பேசியிருக்கிறார்.

உதவி கொடுப்பதன் காரணமாகப் பிரதமர் நேரு, நேபாளத்தின் அரசியலில் தலையிடத் தமக்கு உரிமையிருப்பது போலவும், போனால் போகிறது என்று பெரிய மனம் வைத்து அரசியலில் தலையிடாமல் விட்டுக் கொடுத்திருப்பது போலவும் பேசியிருக்கிறார்.

இன்று நேருஜி நேபாள விஷயத்தில் எந்த மனோபாவத்தோடு பேசினாரோ, அதே மனோபாவத்தோடு அமெரிக்காவும் ருஷ்யாவும் இந்தியாவைப் பற்றிப் பேசலாமல்லவா? அப்போது நமக்கு என்ன கௌரவம் இருக்கும்?

# மிகச்சிறந்தது!




## ப்ரூக் பாண்ட்

## ஸ்பெஷல் ஹோட்டல் ப்ளெண்ட்

டஸ்ட் தேயிலையே

* எப்பொழுதுமே உங்களுக்கென்று புதியதாக தோட்டத்திலிருந்து வருகிறது.
* மிகத் திறமையுடன் கலவை செய்திருப்பதால் இனிமை மிக்க நறுமணம் கொடுக்கிறது.
* லட்சக் கணக்கான மக்கள் அருந்தி ஆனந்தம் அடைவது.

மூன்று அளவுகளில் கிடைக்கிறது
500 கிராம், 100 கிராம்,
50 கிராம்

JWT BB 38F

# காரிருளில் ஒரு பேரொளி

எங்கும் இருள் கவிந்திருக்கும் போது மிகவும் விரும்பி வரவேற்பது ஓர் ஒளிக் கதிரைத் தான். பரந்து விரிந்த பாலைவனத்தில் உள்ள சோலைவனம் எப்படி உயிரையூட்டி நம்பிக்கையும், மகிழ்ச்சியும் அளிக்கிறதோ, அதே போல் கன்னங்கரிய மேகங்களிடையிருந்து பிறக்கும் மின்னல் விசேஷ ஒளியும், காந்தியும் தருகிறது. கனந்தகாரத்தில் தோன்றிய ஸ்ரீ கிருஷ்ணன் இதுபோன்ற ஒரு தெய்விக தீபமே.

நமக்கு ஓராண்டு என்பது தேவர்களுக்கு ஒரு தினம். நமது தட்சிணாயனம் என்பது அவர்களது இரவாகும். நமக்கு ஒரு மாதமென்பதே மறைந்த நம் முந்தையருக்கு ஒரு நாள். இதில் நமது கிருஷ்ணபட்சமே அவர்களுடைய இராப்பொழுது. அஷ்டமி நள்ளிரவு. எனவே கிருஷ்ண பெருமான் தேவர்கள், பித்ரர், மானிடர் எல்லோருடைய காலப்படியும் இரவில் பிறந்தவனாவான்.

அவன் பிறந்த வேளை மட்டும் இருள் சூழ்ந்ததல்ல. பிறந்த இடமோ கன்னங்கரிய சிறைச்சாலை. மேனி வண்ணமும் கருமை. கிருஷ்ணன் என்ற பெயரும் கருமையையே காட்டுகிறது. எங்கும் அடர்ந்து மண்டுருவும் இந்த இருளைத் துளைத்துக் கொண்டுதான் பிரகாசிக்கிறது, நம்மைக் காத்தருளும் அவனது அறிவொளியும், அருளொளியும். சூல் கொண்ட கொண்டல்களிடையே தோன்றும் மின்னல்போல், இந்த ஆழ்ந்த இருளில் பிறக்கும் ஒளியும் மிக்க பிரகாசத்துடன் திகழ்கிறது; ஆத்ம ஞானம், மோட்சம் என்ற இலட்சியங்களை அடையும் மார்க்கத்தை நமக்கு வெளிச்சமிட்டுக் காட்டுகிறது. தன்னந் தனியாக ஆன்ம நாட்டத்துடன் செல்பவனுக்கு இவ்வொளி என்றும் வழி காட்டும்; அதோடு அவனுக்கு உள்ளேயே ஒளிரும் தீபத்தை ஏற்றி வைக்கும். தான் தேடிச் சென்று அடைய விரும்பும் இலக்கு இந்த ஆன்ம விளக்குத்தான் என்பதையும் அவனுக்கு உணர்த்தும். கரிய சக்திகள் தலைதூக்கி நிற்கும்போதுதானே ஞான ஒளியின் தேவை அதிகம்? எனவேதான் பகவானின் ஞானோபதேசம் பகவத்கீதை என்பதாகத் தனிப் பெருமையுடன் துலங்குகிறது.

பகவானின் பெருமையால் செறிவு பெற்று நிரம்பி வழியும் பாகவதம், நூல்களுக்கெல்லாம் ஒரு நூல் எனப் போற்றப் படுகிறது. ஆனந்தத்தை உள்ளே பாய்ச்சும் ஆத்மாவின் சாரம் அது. உடலில் உள்ள ஜீவதத்துவத்துக்கு ஒளியை உணர்த்தும் கண் ஐயனின் அப்புனிதக் கதையே. பிரபஞ்ச முழுதற்கும் மெய்ப் பொருளைக் காட்டுவிக்கும் இந்த மாண்பையே தமிழ் மொழி அன்புடன் கூறும் கண்ணன் என்ற பெயர் குறிப்பிடுகிறது. கிருஷ்ணனை பகவான் என்பதாக மட்டுமின்றி உலகுக்கு ஒளியும், வெப்பமும் அளிக்கும் கண்ணனாகவும் காணும் பெரும் பேறு நம்மையே சாரும்.

பௌதிகக் கண்ணுக்கும், அதேபோல் ஞானக் கண்ணுக்கும் ஆனந்தம் நல்குகிறான் பிரான். அவன் பகர்ந்த கீதையோ செவிக்கு விருந்தாகி, நொந்துபோன ஆத்மாவுக்கு வற்றாத ஆனந்த ஊற்றாக விளங்குகிறது. இப்படிச் சுவை நிறைந்த விருந்து படைத்து நம் சிறுமையிலிருந்தும், நாமாக உண்டாக்கிக் கொண்ட துயரினின்றும் காக்கும் பிரபுவை நம் கண்ணுக்குக் கண்ணாக, கண் பெற்ற பலனின் பழமாக, கண்ணனாகச் சொல்லக் கூடாதா என்ன?

மகிமை பொருந்திய இந்த அவதாரத்தில் பகவான் உயிர்த் துடிப்பு ததும்பும் பலப் பல கோணங்களில் எழில் கோலம் காட்டி, மயக்குறுத்த மாந்தரை ஆகர்ஷித்து, அவர்களைத் தம் அடியாராக ஆக்கி, ஆத்மாவைத் தட்டி எழுப்புகிறான். எத்தனை எத்தனையோ விதமான போக்குகளுள்ள ஆண்களும் பெண்களும் கொண்ட புதிர் இவ்வுலகம். இதில் நன்மையும், தீமையும் நானாவித விசிதா



ஸ்ரீ சங்கராச்சாரியார் காஞ்சி காமகோடி பீடம்

சாரத்தில் கலந்து காண்கின்றன. அநந்தமான இந்த வேற்றுமைகள் நாம் வாழ்க்கையென்பதே. வீரன், வல்லவன், கள்ளன், காம வசப்பட்டவன், பயங்காளி, உழைப்பாளி, வயது முதிர்ந்தவன், வாலிபன், செருக்குள்ளவன், உருகும் இனிய இதயத்தினன், கருமி, செலவாளி, பண்டிதன், பாமரன் இவர்களோடு யோகியும், ஞானியும் ஒன்று சேர்ந்த விந்தைதான் மனிதக் குலம். கிருஷ்ணபிரான் நானாவிதக் கோலம் பூண்டு, இத்தனை விதத்தினரின் இதயக் கதவையும் தட்டுகிறான். இன்பமூட்டும் விஷமங்கள் செய்யும் தீராத விளையாட்டுப் பிள்ளையாக; ஆயர்பாடியில் ஆநிரை மேய்க்கும் ஆயப் பிரானாக; குழலூதும் குமரனாக; சாணூரன் முதலிய மல்லர்களை வெல்லும் வீரனாக; சத்யையின் கைபிடிப்பதற்காக ஏழு காளைகளுடன் ஒரே போதில் போரிட்டு அடக்கிய கட்டிளம் காளையாக; உக்கிர சேன மகாராஜாவுக்கு உற்ற அமைச்சனாக; பாண்டவருக்காகத் தூது சென்ற ஆதரிச அரசதூதனாக; போரில் யுக்திகள் கற்றுத் தந்த ராஜதந்திரியாக—மகத்தான இந்த அவதாரத்தில்தான் எத்தனை விதத்தில் கண்ணன் மக்களைக் கவர்ந்திருக்கிறான்? அதோடு திரௌபதியின் மானம் காத்த போதும், குசேலருக்குப் பொருளாக அருள் சுரந்த போதும், உறுதுணையாக, அநாதரட்சகனாக, கதியற்றோரைக் கைதூக்கி விடுபவனாகக் காட்சி தருகிறான். இவனே கீதையை வழங்கும் ஞானாசாரியனாகவும் பீஷ்மருக்கு முக்தியளிக்கும் மோட்ச நாயகனாகவும் விளங்குகிறான். எப்பொருளிடத்தும் அவன் கொண்ட பேரன்பும், பெருங்கருணையும், தன் உடலில் அம்பைப் பாய்ச்சி உயிரை விடுவித்த வேடனுக்கு அவன் அருள் கூர்ந்தபோது பொங்கி வருகின்றன. வெண்ணெய் களவாடுபவன் நிலைத்து நிற்கும் தனது காந்த சக்தியால் உள்ளம் கவர் கள்வனாக மக்களைக் கொள்ளை கொண்டு தன் எல்லையற்ற தயையையும், கருணையையும் பெறத் தகுந்த பாத்திரங்களாக அவர்களை உயர்த்துகிறான். இக் கருணையிலிருந்து பெருகும் ஞானமே மக்களைப் பந்தத்தினின்று விடுவித்து, காத்தருள்கிறது.

எனவே தான் கிருஷ்ணாவதாரம், பூர்ணப் பொருளின் பெருமை யாவும் துலக்கமாகப் பிரகாசிக்கும் பூர்ணாவதாரமெனப் போற்றப்படுகிறது.



18 சிறந்த மூலிகைகள் கலந்து முதல்முதலாக தயாரிக்கப்பட்ட



## ஆயுர்வேதிக்

### பேஸ்ட்டும், பௌடரும்

உலகத்தில் எல்லா டூத்பேஸ்ட்டும், பௌடரும் பற்களை சுத்தம் செய்கிறது. ஆனால், ஈறுகளை பலப்படுத்த என்னென்ன கலவைகள் அதில் சேர்க்கப்பட்டுள்ளன என்று யோசித்துப் பாருங்கள். முதல்முதலாக ஆயுர்வேதிக் 'விக்கோ வஜ்ரதந்தி' (பேஸ்ட்டும், பௌடரும்) 18 சிறந்த மூலிகைகளினால் தயாரிக்கப்பட்டது. ஈறுகளை நன்றாக இறுகச்செய்து பற்களை மிகவும் பலப்படுத்துகின்றன. ஒரு முறை உபயோகித்து திருப்தியடையுங்கள்.

# விக்கோ வஜ்ரதந்தி

## பேஸ்ட்டும், பௌடரும்







VICCO LABORATORIES DADAR T.T., BOMBAY 14

ஏஜெண்டுகள்

மெஸர்ஸ் ஆர். எல். கௌடர் அண்டு கம்பெனி, சென்னை - 1
மெஸர்ஸ் கே. எஸ். கௌடர் அண்டு கம்பெனி, பெங்களூர் - 9
மெஸர்ஸ் என். தேசாய கவுண்டர் அண்டு கம்பெனி, கோயமுத்தூர் - 1

# நெஞ்சில் விழுந்த அடி




தளதளவென்று குருத்துப் பிரிந்த தலை வாழை இலையில் அவியல் பொரியல், பச்சடி, கிச்சடியெனக் கமகமத்துக் கொண்டிருந்தது பார்வதியின் கைமணம்.

விபூதிக் கப்பறையிலிருந்து திருநீற்றை எடுத்து இட்டுக் கொண்ட கைலாசம் மனையில் அமர்ந்தவர் இலையைச் சுற்றி நீர் விளாவினார். ஜாங்கிரியும் தோல் சீவிய முழு மாம்பழமும் இலையில் வைக்கப்பட்ட போது 'என்னவென்' பதைப் போல் மனைவியை ஏறிட்டு நோக்கினார்.

எவர்சில்வர் வாளியிலிருந்த பாயசம் இலையின் ஒரு பகுதிக்கு வந்தபோது அவரால் ஆச்சரியத்தை அடக்கிக் கொண்டிருக்க முடியவில்லை.

''இன்றைக்கு என்ன விசேஷம், பார்வதி? என்னுடைய திறமைக்குச் சோதனை வைத்திருக்கிறாயே!.......''

''இதுகூடப் புரிந்து கொள்ள முடியவில்லை அதிகாரிக்கு!'' என்று முறுவலித்தாள் பார்வதி.

அவள் சிரிப்பில் கண்ட பெருமிதம் அவர் உள்ளத்தில் உண்மையை உணர்த்தியது.

''எல்லாம் சுயநலம்தான், பார்வதி! நான் அதிகாரி ஆகி விட்டதால் உனக்குச் சலுகைகள் கிடைக்கும். இப்பொழுது கட்டிக் கொண்டிருக்கும் பெங்களூர் பட்டு காஞ்சிபுரம் பட்டாக மாறலாம். கைகளில் மெருகிடும் தங்க வளையல் கல்வளையலாக மாறலாம். அதற்கு லஞ்சமாகத்தானே இந்த விருந்தும்?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. என்னவோ என் ஆசை!'' என்றவள் அத்துடன் நிறுத்திக் கொண்டிருக்கலாம். நீண்ட பெருமூச்சுக்கு அப்பால் ஏன்தான் அந்த வார்த்தையைச் சொன்னாளோ......?

''நீங்கள் என்னவோ ஆசையாகத்தான் எல்லாம் செய்து தருகிறீர்கள். வெளியே என்ன சொல்லிக் கொள்கிறார்கள். 'அவளுக்கென்ன குழந்தையா குட்டியா? கல்லுக்குண்டாட்டம் மினுக்கிக் கொண்டு திரிகிறாள்!' என்றல்லவா சொல்கிறார்கள்......?''

ஐயோ பார்வதி அந்த வார்த்தையை ஏன்தான் சொன்னாளோ......?

அதே வார்த்தை பலமுறைகள் பலரால் பெரிதாக விழுந்திருக்கிறது அவர் நெஞ்சில். அறிந்தோ அறியாமலோ பார்வதி சொடுக்கி விட்ட அடியால் சுருண்டுவிட்டார் கைலாசம்.

எந்தச் சொல்லைத் தாங்க முடியாமல் உள்ளுக்குள்ளே குமுறிக் கொண்டிருக்கிறாரோ, அதே வார்த்தையைப் பார்வதியே கூறிப் புயலெழுப்பி விட்டாள்....கைக்கும் வாய்க்குமாக உறவாடிக் கொண்டிருந்த பால் பாயசம் இலையில் தேங்கியது. எழுந்து கைகழுவினார்.

''என்ன இது முழுதும் சாப்பிடாமல் எழுந்து விட்டீர்கள்? அதற்குள் புதிய உத்தியோகத்தின் பசி உங்களை எழுப்பிவிட்டதா?''

'அதைவிடக் கடுமையான பளுவை என் நெஞ்சில் ஏற்றிவிட்டாய், பார்வதி!' என்று சொல்லத் துடித்த வாயை மனத்துக்குள்ளாகவே விழுங்கிக் கொண்டார்.

சோர்வுடன் சாய்வு நாற்காலியில் சாய்ந்தவர் பக்கத்தில் வெற்றிலைத் தட்டு அமர்ந்தது.

''சரியாகவே சாப்பிடவில்லை. உங்கள் உடம்புக்கென்ன?'' என்று முதல் முறையாக அவர் முகத்தை உற்று நோக்கியவள் திடுக்கிட்டுக் கேட்டாள்.

''அதிகமாகச் சாப்பிட்டு விட்டேன். நீ போய்ச் சாப்பிடு!'' என்று மனைவியை அனுப்பிவிட்டுக் கண்களை இறுக மூடிக் கொண்டார்.

ஊரார் அடியைப் பொருட்படுத்தாத குழந்தை தன் அன்னை அடித்துவிட்டால் அது பொறுக்க முடியாமல் அழுது துடிப்பதைப் போல் கைலாசத்தின் மனம் பார்வதி கொடுத்த அடியால் விக்கி விக்கி அழுது கொண்டிருந்தது.

கீழ் வீட்டில் அவர் தம்பி மகன் அழுது கொண்டிருந்தான். ''பாயசம்...பாயசம் இன்னும் பாயசம்......''

கீழ் வீட்டிலும் சாப்பாட்டு நேரம். சாப்பாட்டு அறைக்கு வந்த வேதநாயகம்-கைலாசத்தின் தம்பி—''ஏதுலே பாயசம்!'' என்று கேட்டுக்கொண்டே அவருக்கிட்ட தட்டின் முன் அமர்ந்தார்.

''ஆமாம்...நம்ம வீட்டிலே செல்வம் பொங்கிப் போகுதில்லை. அதைத் தாங்க மாட்டாமல் பாயசம் வைச்சிருக்கேன்!'' என்று குத்தலாகச் சொன்னவள் பாயசம் வந்ததைச் சொன்னாள்.

''மேலேயிருந்து கொடுத்தனுப்பினாங்க'' என்று கூறினாள்.

'என்ன விசேஷம்?' என்று நெற்றியைச் சுருக்கிய கணவனுக்குச் சாதாரண வார்த்தையில் பதில் சொல்லியிருக்கலாம். வழக்கமான பாணியில் பெரிய வார்த்தைகளாகத் தேடி எடுத்துச் சொன்னாள்.

''உத்தியோகம் உயர்ந்திருக்குதில்லை உங்க அண்ணனுக்கு..'' என்றவள் மேலே தொடர்ந்தாள். ''அவருக்கென்ன குழந்தையா? குட்டியா?' ஒண்ணுமில்லே வெட்டிக்கட்டை. அவருக்குச் சம்பளம் மேலே மேலே போகுது. நமக்குக் குழந்தைங்கதான் மேலே மேலே விருத்தியாகுது...''

தன் துக்கச் சுமையை இறக்கி விட்டதாக நினைவு அவளுக்கு. ஆனால் அந்த வார்த்தை - அதே சுமை மேல் வீட்டில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருக்கும் கைலாசத்தின் நெஞ்சில் பாறாங்கல்லாய்ச் சாடியிருக்கும் என்பதை அவள் எங்கே உணரப் போகிறாள்?

கட்டிய மனைவி பறக்க விட்ட சிறு பொறியின் சூடு தாங்காமல் துடித்துக்கொண்டிருந்த

கைலாசத்தின் நெஞ்சில் கொழுந்து விட்டெரியும் பந்தமொன்றைச் செருகி விட்டாள் அவர் தம்பி மனைவி.

ஊமையைப் போல உள்ளுக்குள்ளேயே அழுது துடித்தவர் உடை மாற்றிக் கொண்டு ஆபீஸுக்குப் புறப்பட்டார்.

புதிய நிர்வாகத்தில் சிறிது சிறிதாக அவர் மனத்தின் சூடு ஆறி வந்தது. இடைவேளை கிடைத்தால் எங்கே தம் எண்ணம் தலைவிரித்தாடத் தொடங்கி விடுமோ என்று அஞ்சி ஓய்வு நேரத்தில் கூடப் பைல்களைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

நன்னு கதவுக்குப் பின்னால் பியூன் தலை தெரிந்தது. அவர் தலை நிமிர்ந்தபோது, ''தங்கள் நண்பர் கருணாகரன் பார்க்க வந்திருக்கிறார்'' என்று பதிலுக்காக முகத்தை நோக்கினான் பியூன்.

''வரச் சொல்.''

கவலைகள் நடுவே வாழும் தீவு என்று சொன்னாலும் பொருந்தும் கருணாகரனின் வாழ்க்கை. சிடுசிடுத்த மனைவி, நோயாளிக் குழந்தைகள், பற்றாக்குறை வருமானம், இத்தனையுமிருந்தும் மனிதன் எப்பொழுதும் சிரித்த முகத்துடன்தான் இருப்பார். தம் கலகலப்பான பேச்சால் பிறரது கவலைகளை யெல்லாம் பறக்க அடித்து விடுவார்.

''உங்கள் நேரத்தைச் சாப்பிட வந்திருக்கும் விருந்தாளி!'' என்று கூறிக் கொண்டே உள்ளே நுழைந்தார் கருணாகரன்.

''சாப்பிடும் நேரத்தில் தான் வந்திருக்கிறீர்கள்!'' என்று கூறி வரவேற்ற கைலாசம் பியூனிடம் ஏதோ சாடை காட்டினார்.

சிறிது நேரத்தில் சிற்றுண்டியும் காப்பியும் மேஜைக்கு வந்து சேர்ந்தன.

''ஐயா! நான் உங்களுடன் சாப்பிட வரவில்லை. பணத்தைச் சாப்பிட வந்திருக்கிறேன். என் வீட்டிலே ஒரு படிக்காத மேதை வளருகிறானே— அவன்தான் என் பிள்ளை-அவன் படிக்காத படிப்புக்காகப் பள்ளிக்கூடத்தை விட்டுக் கல்தா கொடுத்தனுப்பாமல் பள்ளி வாசலை மிதித்து வரக் காணிக்கை செலுத்த என் கை வறண்டுபோய் விட்டது. ஈரமுள்ள கையான உங்களைத் தேடித்தான் வந்திருக்கிறேன்!''

அவர் வந்த நோக்கத்தைப் புரிந்து கொண்டார் கைலாசம். உணவருந்த வைத்து அவர் கேட்ட பணமும் கொடுத்தனுப்பினார். அது வரையில் அவர் மனத்தில் சற்றே நிலவியிருந்த அமைதியையும் கருணாகரனுடனே விடைபெற்றுக்கொண்டு போய்விட்டது போன்ற ஒரு சோர்வு. நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டு மீண்டும் பைல்களிடையே மனத்தைப் பதிய விட்டார்.

அறைக்கு வெளியே சென்ற கருணாகரன் யாரிடமோ கைலாசத்தின் நல்ல மனத்தைப் பற்றியும் கொடைத் தன்மையைப் பற்றியும் பெருமையாகப் பேசிக் கொண்



டிருந்தார். பாவி மனிதர் பணத்தைப் பெற்றவர். பெற்ற கலடு தெரியாமல் போவது தானே? அவரை யார் புகழ் மாலை சூட்டச் சொன்னது?

நன்றியை மனம் விட்டுப் பேசித் தீர்த்து விட்டுக் கருணாகரன் அங்கிருந்து கிளம்பத் தயாரான பொழுது தடுத்து நிறுத்தினர் உதவி மானேஜர். கைலாசத்துக்கு அதிகாரி பதவி கிடைத்த பொருமலை அடக்கமாட்டாமல் துடித்துக் கொண்டிருந்த மானேஜருக்கு அவரைப் பற்றிய புகழ்மாலையையும் கேட்டுச் சகித்துக் கொண்டிருக்க முடியுமா என்ன?

“அவருக்கென்ன, ஐயா! குழந்தையா குட்டியா? வீட்டிலே வைத்துப் பாஷாணம் பிடித்துப் போகிற பணத்தை உமக்குக் கடனுக் கொடுத்திருக்காரு. என்னமோ தானம் கொடுத்திட்டமாதிரி துள்ளிக் குதிக்கிறே!”

வார்த்தையால் விஷத்தைக் கக்கினர் கைலாசத்தின் உயர்வால் மனம் பொறுக்காத உதவி மானேஜர்.

கீழ் மனம் படைத்த அந்த மனிதர் கக்கிய விஷம் நெஞ்சில் புகுந்து சுருண்டு விழுந்தார் கைலாசம்.





விஷம் கக்கும் அந்த வார்த்தையிலின்றும், அவரைத் துடி துடிக்க வைக்கும் அந்த வார்த்தையினின்றும் அவருக்கு மீட்சியே கிடையாதா? திரும்பிய பக்கமெல்லாம் இதே சொல்தானா?

இரண்டு மாதங்களுக்குமுன் கைலாசத்தின் சகோதரி, குழந்தை குட்டிகளுடன் வந்து முகாம் போட்டிருந்தாள். வருஷா வருஷம் லீவில் அங்கு வருவாள். வந்து வேண்டியதை அனுபவித்துவிட்டுப் பண்டமாகவும் பாத்திரமாகவும் சுருட்டிக் கொள்வதோடு, தம்பியாக வாங்கிக் கொடுக்கும் துணி வகைகளையும் பெட்டியில் அடுக்கிச் செல்வாள். செல்பவள் வெறுமனே சென்றுவிட மாட்டாள். தனது மனத்தை அழுத்திக் கொண்டிருக்கும் எண்ணத்தை வெளியிடவும் தவற மாட்டாள். ஒவ்வொரு தடவை வந்து போகும்போதும், தம்பி தன் குழந்தைகளுக்கு நகைகளாகப் பூட்டி வழியனுப்பும் பெரிய மனம் படைத்தவராக இல்லையே என்று அவள் குறைப்பட்டுக் கொள்வாள்.

சென்ற தடவை வந்திருந்தபோது தன் குழந்தைகளோடு படம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்றாள். கணவன் வீட்டில் ஏற்படாத ஆசைகளெல்லாம் பிறந்த வீட்டுக்கு வந்தபோது ஏற்பட்டு விடும் போலிருக்கிறது.

பார்வதியின் பெட்டியில் இருந்த நகைகளெல்லாம் சகோதரியின் குழந்தைகள் மேனியை அலங்கரிக்கப் படம் எடுத்து முடித்தது. அந்தச் சாக்கில் அன்று முழுதும் நகைகள் தன் பெண்ணின் மீது பூட்டியிருந்தும் அவைகளைக் கழற்றிக் கொடுக்க மனம் வரவில்லை; ‘இரவில் படுக்கப் போகுமுன் நகைகளைப் பெட்டியில் வைத்து விடலாமே?’ என்று பார்வதி கேட்கவும், பொருமும் நெஞ்சுடன் எல்லா நகைகளையும் கழற்றிக் கொடுத்தவள் முத்துக் கோத்த வங்கியை மட்டும் கொடுக்காமல் தன்னிடமே வைத்துக் கொண்டாள்.

“வங்கி...” என்று பார்வதி கேட்டபோது சீறி எழுந்தாள் நாயகி.

“உனக்கென்ன ‘குழந்தையா குட்டியா’? எந்தப் பெண்ணுக்குப் பூட்டி அழகு பார்க்கப் போகிறாய்? அதை என் பெண்ணுக்குக் கொடுத்தால்தான் என்ன?” என்று அதிகாரப் பிச்சை கேட்டாள்.

வாயை வில்லாக மாற்றியது பார்வதியின் முகம். “அது.. அது....என் அம்மாவின் நகை. அதை...அதை...”

“அடியம்மா உன் அம்மா நகையை யாரும் விழுங்கிவிட மாட்டார்கள். இந்தாடியம்மா பெட்டியில் வைத்துப் பூட்டு...நீ அணிந்து கொள்ளப் போகிறாயா? அல்லது பூட்டி அழகு பார்க்க உனக்கென்ன குழந்தையாகுட்டியா?”

பார்வதி உடலெல்லாம் தீக்குழம்பாய்ச் சுருண்டு விழுந்து விட்டாள்.

அன்று பார்வதியின் நெஞ்சிலே பாய்ந்த நெருப்புத் துண்டம் இன்று கைலாசத்தின் நெஞ்சிலும் பற்றிப் பரவி அவரைத் தகித்துக் கொண்டிருந்தது.

‘சீ...திரும்பிய பக்கமெல்லாம் இதே பேச்சா...என்னிடம் பணம் பெறுபவர்களெல்லாம் என் நெஞ்சிலே அடித்து அடித்துத்தான் என் கைப் பணத்தைப் பறிக்க வேண்டுமா? அப்படிப்பட்ட பணம் இல்லாவிட்டால்தான் என்ன? பணம் கேட்பவர்கள் வேண்டுமென்று கேட்டுப் பெற்றுப் போகக் கூடாதா? ‘குழந்தையா குட்டியா?’ என்று நான் பெற முடியாத ஏதோ ஒன்றைச் சுட்டி என்னுடைய நெஞ்சை உதைத்து என் பொருளைப் பறித்துச் செல்ல வேண்டுமா?

இதைவிட என்னிடம் பணமே இல்லாதிருந்தால் எத்தனையோ அடிகள் மிச்சமாக இருந்திருக்குமே! என் நெஞ்சமும் இத்தனை நொந்து புண்ணாக நேர்ந்திருக்காதே...

ஆம்...அதுதான் முடிவு...

கைலாசத்தின் மனம் முடிவுக்கு வந்து விட்டபோது அவர் கை ராஜினாமாக் கடிதத்தை எழுதி முடித்துவிட்டது.

புண்பட்டுச் சீழ் பிடித்துப் போயிருக்கும் நெஞ்சில் இனி அடி விழாது. அடியேவிழாது.

இந்தத் தெம்பில் அவர் கால்களும் சற்றுத் தெம்பாக நடந்தன.

மேல்மாடி விட்டு இறங்கி வந்தபோது, கீழே நாலைந்து குமாஸ்தாக்கள் நின்று ஏதோ பேசிக் கொண்டிருந்ததைக் கேட்க நேர்ந்தது.

''நம்ம கைலாசத்துக்குப் பதவி உயர்வு குறித்து அளிக்கப்படும் பாராட்டு விழா மிகப் பிரமாதமாகச் செய்துவிட வேண்டும். நமக்கு மேல் அதிகாரி என்பதற்காக மட்டுமல்ல நம்முடைய பாராட்டு. கஷ்டப்படும் பலருக்குக் கைகொடுத்துக் காக்க வந்த தெய்வமாகப் போற்றப்பட வேண்டியவர் ஸ்ரீ கைலாசம்...''

பேசியவரின் குரலை உற்றுக் கேட்டார். நாலைந்து தினங்களுக்கு முன் அவரிடம் பண உதவி பெற்றுச் சென்ற சங்கரனின் குரல்.

''சாகக் கிடந்த என் குழந்தை அவர் உதவிய பணத்தால் பிழைத்தெழுந்தது. அன்று மருந்து வாங்கப் பணமில்லாமல் எங்கெங்கோ அலைந்து ஏமாற்றமடைந்து, அவரிடம் சென்றபோது தயங்காமல் எடுத்துக் கொடுத்தார். பணம் இருந்தால் மட்டும் போதுமா? சமயத்தில் கொடுத்து உதவும் குணமும் வேண்டாமா?'' குரல் தழுதழுக்கக் கூறினார் குமாஸ்தா சங்கரன். அன்று அவர் பணம் உதவியிரா விட்டால் தன் குழந்தையின் கதி என்னவாகி யிருக்கும் என்பதைக் கற்பனையில் கண்டு நடுங்கியதை அவர் குரல் எடுத்துக் கூறியது.

''அவர் பெரிய ஆல விருக்ஷம், சார்! பல மக்களுக்குத் தங்க நிழல் தரும் ஆல விருக்ஷத்துக்கு ஒப்பானவர் நம்ம கைலாசம். அவரால் வாழ்ந்து கொண்டிருக்கும் உறவினர்கள் எத்தனையோ பேர். அவரது உதவியால் ஆபத்துக்கள் பல கடந்த நண்பர்கள் நம்மைப்போல் எத்தனையோ பேர். படிக்கத் திறன் இருந்தும் பணம் செலவழிக்க வகையில்லாது திண்டாடிய மாணவர்களின் படிப்புக்குப் பணம் கொடுத்து உதவிய பெருமை அவருடையது. ஒருவர் உழைப்பால் பலன் பெறுபவர் பலர்; பெறப் போகின்றவர் கோடி கோடி...''

கைலாசத்தின் நெஞ்சத்தில் இப்பொழுதும் அடிதான் விழுந்தது. ஆனால் இந்த அடி உறைக்கவில்லை. அவரைத் துன்புறுத்தி வேதனை யேற்படுத்தவும் இல்லை. இதமாக—சூடாகக் கொடுக்கும் ஒத்தடமாக—தடவிக் கொடுத்த ஔஷதமாக இருந்தது.

என்னால் பலன் பெற வேண்டியவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். நன்மைக்குப் பயன்பட வேண்டிய என் சக்தியை ஏன் வீண் பொழுதுபோக்கிலும் நீண்ட நெடுமூச்சிலுமாகச் செலவிட வேண்டும்? நான் உழைப்பேன். என் உழைப்பால் முடிந்தவரையில் பலருக்கும் நிழல் தருவேன்......

நெஞ்சில் நிறுத்திய நினைவோடு சட்டையைத் தடவிப் பார்த்தார் அவர். எழுதிய கடிதம் பத்திரமாக இருந்தது. வீட்டுக்குள் நுழைந்தவருக்குக் காலையில் கண்ட சோர்வோ, வலியோ இப்பொழுது இல்லை. வெளியே செல்லக் கிளம்பிய மனைவியைக் கண்டதும் அவருக்கிருந்த கொஞ்சநஞ்ச அசதியும் பறந்தது.

''சீக்கிரம் புறப்பட்டு வருகிறீர்களா? கோவிலுக்குச் சென்று வரலாம்!'' என்று கேட்ட பார்வதிக்கு உற்சாகமாகப் பதிலிறுத்தார் கைலாசம்.

''உன் கணவர் ஆல விருக்ஷம். பலருக்கு நிழல் தரும் அதன் கிளைகள் பலவாகப் பெருகித் செழித்தோங்க வேண்டுமென்று தேவியிடம் வேண்டிக்கொள், பார்வதி...!'' என்று சொன்னது அவளுக்குப் புரிந்ததோ இல்லையோ...கைலாசத்தின் நெஞ்சுக்கு இதமாக இருந்தது.

சற்றைக்கெல்லாம் இருவருமே கோவிலை நோக்கி நடந்தார்கள்.

அட்டைப்பட விளக்கம

# திலகமிடும் தெய்வமணிக்கரம்

தமிழ் மொழியின் பெருமையான நீண்ட வரலாற்றில் ஆண்டாள் ஆழ்வார்களுடைய காலத்துக்குப் பின் கண்ணனைப் பற்றி மிக அற்புதமாகப் பாடிய பெருமை புதுயுகக் கவியாகிய பாரதியாரையே சேரும். கண்ணன் பாட்டு ஒரு மறுமலர்ச்சிப் பிள்ளைத்தமிழ். சிறு பிரபந்தங்களாகிய கோவை, உலா முதலிய எல்லாவற்றின் தனித்தனி அழகுகளும் இது ஒன்றிலே ய மொத்தமாக அமையும்படி பாடியிருக்கிறார் பாரதியார். கண்ணனை எத்தனைவிதமாகப் பாவனை செய்து பாடமுடியுமோ அத்தனை விதமாகப் பாவனை செய்து படைத்த கவிக் களஞ்சியம் இது. கண்ணன் என் காந்தன் என்ற பாட்டில் வரும் ஒரு காட்சியை,

குனியும் வாண்முகத்தான் — கண்ணன்
குலவி நெற்றியிலே
இனிய பொட்டிடவே — வண்ணம்
இயன்ற சவ்வாதும்
கொண்டை முடிப்பதற்கே — மணம்
கூடு தயிலங்களும்
வண்டு விழியினுக்கே — கண்ணன்
மையும் கொண்டுதரும்

என்று கவிசித்திரமாக ஆக்கியிருக்கிறா பாரதியார். இந்த இதழ் அட்டையில் அதையே வண்ணச் சித்திரமாக வழங்குகிறார் நமது ஓவியர் விஜு. கண்ணன் பிறப்பின்போது பாரதியாரின் இந்தக் கவிதையை நினைந்து நினைந்து நாமும் பக்தி பரவசமடைகிறோம்.

# குடும்ப சம்பந்தமான அறிவு நூல்கள்

புகழ்பெற்ற எழுத்தாளர்



**எஸ். கல்யாணி** எழுதியவை

| | |
|---|---|
| பெண்களும் ஆரோக்கியமும் | 2.00 |
| பெண்களும் நோய்களும் | 2.00 |
| பெண்களும் அழகும் | 1.50 |
| தாய்மையும் குழந்தை வளர்ப்பும் | 4.50 |
| மணமகளுக்கு மட்டும் | 1.50 |
| மணமகனுக்கு மட்டும் | 1.50 |
| சமையல் கலையும் ஆரோக்கிய உணவும் | 3.50 |

[illegible] ரயில்வே ஸ்டால்களிலும் கிடைக்கும்

இலங்கையில் கிடைக்குமிடம்:

த. தம்பித்துரை, நியூஸ் ஏஜண்ட், யாழ்ப்பாணம்




**இன்ப நிலையம் மயிலாப்பூர்-சென்னை-4.**

---

# "மூலம் தீராத வினையன்று"

## பாதிக்கப்பட்டவர்கள் கூறுகிறார்கள்-புதிய நிவாரணி அரிப்பு, எரிச்சல் மற்றும் வலியிலிருந்து குணமளிப்பதுடன் மூலத்தையும் சுருக்குகிறது.



உலகப் பிரசித்தமான ஆராய்ச்சிக் கூடமொன்று மூலத்தைச் சுருக்குவதுடன், வலியற்றமுறையில் குணப்படுத்தக்கூடிய புதிய பொருள் ஒன்றைக் கண்டு பிடித்திருக்கிறது. அப்பொருள் சில நிமிடங்களிலேயே அரிப்பையும் வலியையும் போக்குவதுடன் பாதிக்கப்பட்ட தசைநார்களையும் குணப்படுத்துகிறது. உண்மையாகவே, சுருக்கமும் ஏற்படுகிறது. டாக்டர்களின் மேற்பார்வையில் நடத்தப்பட்ட பரிசோதனைகளும்-10, 20 வருஷங்களான கேஸ்களில்கூட-இதை நிரூபித்தன. மேலும் வியக்கத்தக்கதென்னவென்றால், இந்த நல்ல முன்னேற்றம் பல மாதங்களுக்கு நீடித்திருந்தது. உண்மையாகவே பாதிக்கப்பட்டவர்கள், இதனால் அடைந்த பூரணக் குணத்தைக் கண்டு வியந்து "மூலம் தீராத வினையன்று" எனக்கூறினார்கள். இவ்வளவு பலன்களும், எந்த விதமான போதை தரும் மருந்துகளோ, அல்லது துவர்ப்பு பொருள்களோ, மயக்க மருந்துகளோ, உபயோகிக்காமல் அடையப் பெற்றவை. இரகசியம் என்னவென்றால், இந்த விசேஷமான புதிய நிவாரணி (பயோ-டைன்*) புண்ணான இடத்தைச் சீக்கிரத்திலேயே குணப்படுத்தி, மறுபடியும் ஆரோக்கியமான தசை துரிதமாக வளர உதவுகிறது. இப்பொருள் களிம்பு வடிவத்தில் ப்ரிப்பரேஷன் H* என்ற பெயரில் கிடைக்கிறது. உண்மையாகவே மூலத்தைச் சுருக்குவதுடன்-ப்ரிப்பரேஷன் H*, வழவழப்பாக்குவதன் மூலம் கழிவுப் பொருள் வெளியேறும் போதுள்ள வலியைக் குறைக்கிறது. அது மூலத்தின் முக்கிய காரணமான இரணம் பரவுவதையும் தடுக்கிறது.

இப்பொழுது இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:

ஜாப்ரே மானேர்ஸ் & கம்பெனி லிட்.,

டிரேட்மார்க் உரிமையாளர்கள்:

ஒயிட்ஹால் லாபரட்டரீஸ், U.S.A.

**ப்ரிப்பரேஷன் H***

களிம்பு

*டிரேட் மார்க்.

# அன்பே ஆரமுதே

தி. ஜானகிராமன்

## அத்தியாயம் இருபத்திரண்டு



"நாகம்மாள் உங்களிடம் நிறையச் சொல்லியிருக்கிறாள் என்று தெரிகிறது. சந்திரா எப்படியிருக்கிறாள்?" என்று கேட்டார் அனந்தசாமி ருக்மிணியிடம்.

"சந்திராவிடம் நான் விவரமாக எல்லாவற்றையும் கேட்டேன். ரங்கனைப் பற்றி அவள் தப்பாக ஒன்றும் நினைக்கமாட்டாள் போலிருக்கிறது.. அவன் தப்பாகவே இருப்பதாகத் தெரிந்தால்கூட அவள் அதை ஏற்றுக்கொள்ள மாட்டாள்....."

"பொறுத்துக்கொள்வாள் என்கிறீர்களா?"

"ஆமாம்."

"எனக்கும் அந்த அபிப்பிராயம் தான் உண்டாயிற்று. ஹூம் எத்தனை படிக்காதவரும், எத்தனை சுதந்திரம் தான் கொடுப்பதாகப் படிப்பும் நாகரிக தேவதையும் புலம்பினாலும் பெண் பெண்ணாகத்தான் இருக்கிறாள்."



"சுதந்திரத்தை அனுபவிக்கப் பயப்படுகிறார்கள் பெண்கள் என்று சொல்கிறீர்களா?" என்று கேட்டாள் ருக்மிணி.

"அப்படி முழுதும் சொல்லவில்லை. சுதந்திரம் ரொம்பச் சுமையாயிருக்கிறது பெண்களுக்கு. சுதந்திரம் என்றால் பொறுப்பும் கவலையும் சேர்ந்துதானே வரும்... என்னைக் கேட்டால், எந்தக் காலத்திலும் ஆண் பிள்ளைகள் பெண்களுக்கு எந்தச் சுதந்திரத்தையும் மறுத்ததில்லை. அவர்களாகவே வேண்டும் என்றுதான் அடிமை வாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்."

அனந்தசாமி சொல்வதைக் கேட்டு ருக்மிணி சிரித்தாள். சற்று யோசித்தாள். "வாஸ்தவம்" என்றாள்.

"நீங்களும் தர்க்கம் பண்ணாமல் ஒப்புக் கொண்டு விட்டீர்களே?" என்று கேட்டார் அவர்.

"அது பகவானாக இருக்கட்டும், இயற்கையாக இருக்கட்டும். படைப்புத் தொழிலை அழியாமல் காக்க வேண்டும், வம்ச விருத்தி செய்ய வேண்டும் என்று அந்தச் சக்தி கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிற வரையில், இந்தக் காமம், கல்யாணம், காதல் எல்லாம் இருந்துதான் தீரும். அவை இருக்கிறவரையில் நாங்களும் இந்தத் தங்க விலங்கைப் போட்டுக் கொண்டுதானிருப்போம்" என்றாள் ருக்மிணி.

"அப்பொழுது ஏன் இப்படி ஏதோ பெரிய சண்டை இருப்பதாகக் கூச்சல் போடுகிறீர்கள்?"

"யார் போடுகிறார்கள்?"

"படித்த பெண்கள், சமூக சேவிகள் எல்லாரும்...."

"நாங்கள் அடிமைகள் இல்லை என்று 'உளதாக் கட்டி'க்காவது சொல்லிக் கொண்டிருக்க வேண்டாமா? பயப்படுகிறவர்கள்தான் ரொம்பத் தைரியமாயிருப்பதாக விறைத்துக் கொண்டு நடப்பார்கள். அதுவும் இப்படிச் சண்டை போடுகிறவர்கள் பெரும்பாலும் இந்த அடிமைத்தனத்துக்காக ஏங்கி ஏங்கிக் கிடைக்காமல் ஏதோ ஒரு இழவில் ஏமாந்து போனவர்களாகத் தான் இருக்கிறார்கள்...."

"நிஜமாகவா?"

"ஆமாம்."

"வீட்டில் வேலை குறைச்சல், பண வசதி, படிப்பு வசதி, வாகன வசதி, பேச்சு வசதி, - இவை இருப்பதனால் தான் என்றல்லவா நான் நினைத்தேன்?"

"அது இருக்கலாம். ஆனால் அதெல்லாம்கூட இந்த ஏமாற்றத்துக்குப் பிறகு சம்பாதித்துக் கொண்ட விருப்புகளாக இருக்கக் கூடாதா?"

அனந்தசாமி சிரித்தார். ருக்மிணி அந்தச் சிரிப்பைத் தாங்க முடியாமல் குனிந்து கொண்டாள். வேறு பக்கம் திரும்பிக் கொண்டே, "நான் இன்று இரவு விமானத்தில் டில்லிக்குப் போகிறேன்" என்றாள்.

"டில்லிக்கா?"

மறுகணமே தம் அதிர்ச்சியை மறைத்துக் கொள்ள முயன்றார் அனந்தசாமி. "இன்றைக்கா போகிறீர்கள்?" என்று சாதாரணமாகக் கேட்டார்.



"ஆமாம். வேலையை ராஜினாமா செய்து விட்டு, சித்தியை அழைத்துக் கொண்டு வரப் போகிறேன்."

"திடீரென்று ராஜினாமா கொடுத்தால் ஏற்பார்களா?" என்று கேட்டார் அனந்தசாமி.

"திடீரென்று என்னென்னவெல்லாமோ நடக்கிறது. ராஜினாமா ரொம்பச் சின்ன விஷயம் இல்லையா?"

"ஏற்றுக் கொள்ளா விட்டால்?"

"மூன்று மாசச் சம்பளத்தைக் கொடுத்து விட்டு வருகிறது" என்றாள் ருக்மிணி.

"அவ்வளவு...."

"நான் வருகிறேன்" என்று எழுந்தாள் ருக்மிணி.

"கிளம்பி விட்டீர்களா அதற்குள்?"

"இதைச் சொல்லத்தான் வந்தேன். நான் வரும் வரையில் சந்திராவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்... அதாவது ரங்கனை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்."

"அப்படியென்றால்?"

"எனக்கு ரங்கனைப் பார்த்தது முதல் ஒன்றும் புரியவில்லை. நாகம்மாள் சொன்னதெல்லாம் கேட்டு யாரோ ஓர் ஆளைக் கற்பனை செய்து கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுது பார்த்த ரங்கன் அதையெல்லாம் அழித்து விட்டான். அவ்வளவு கௌரவமான மனிதனாகத் தோன்றுகிறான். இதுவும் நிரந்தரமான தோற்றமா என்று சந்தேகமாக இருக்கிறது. அதனால் தான்



அவளை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளவேண்டும் என்றுசொன்னேன்.''

''ஜாக்கிரதையாக என்றால்?''

''எனக்கு அதற்கு மேல் சொல்லத் தெரியவில்லை. ஏதோ தோன்றிற்று, சொன்னேன்.... நான் வருகிறேன்'' என்று எழுந்து நடந்தாள் ருக்மிணி.

கூடவே நடந்த அனந்தசாமி ''ஆமாம்..'' என்று மறுபடியும் ஆரம்பித்ததைக் கேட்டுச் சற்று நின்றாள் ருக்மிணி.

''என்ன?''

''ஒன்றுமில்லை. டிக்கெட்டெல்லாம் வாங்கியாகி விட்டதா?''

''சீட் ரிஸர்வ் பண்ணிவிட்டார் சுப்புசாமி மாமா.''

''ஒன்றைப் பிடித்துக் கொண்டு தானே ஒன்றை விட வேண்டும். இந்த வேலையை நிச்சயம் செய்து கொண்டு விட்டு...''

''ஒன்றைப் பிடிக்க, ஒன்றை விடலாமே?'' என்று சிரித்துக் கொண்டே சொல்லி விட்டு மெதுவாக மாடிப்படி இறங்கினாள் ருக்மிணி.

வாசலில் காரைக் காணோம்.

''காரில் வரவில்லையா?''

''என் கார் இல்லையே அது'' என்று சொல்லிக் கொண்டே ருக்மிணி வாசலில் இறங்கி விட்டாள்.

நாலைந்து விநாடிகள் அவள் போவதைப் பார்த்துக் கொண்டே நின்றார் அனந்தசாமி. ''முப்பது வருஷங்கள் கழித்து...என்ன இது!...'' அதற்குமேல் ஒன்றும் அவர் மனத்துக்குச் சொல்லத் தோன்றவில்லை. அதற்குள் கடையில் இரண்டு நோயாளிகள் காத்திருந்தார்கள். திரும்பி வந்தார். அவர்களை விசாரித்தார். மருந்துப் பொட்டலங்களை மடித்துக் கொடுத்தார். மாடிக்குப் போய் விட்டார்.

'அவள் இங்கேயே வந்து...இங்கேயே வேலை பார்த்துக் கொண்டு... பிறகு?'

அப்பொழுதும் ஒன்றும் அவருக்குத் தோன்றவில்லை.

ஆனால் அவள் இட்ட கட்டளை மட்டும் இப்பொழுது காதில் ஒலித்தது. ''ரங்கனை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள்.....''

இதற்கு என்ன அர்த்தம்?

சற்றுக்கழித்து, எல்லாவற்றிலிருந்தும் சற்று விலகி நின்றார் அவர். யார் எப்படிப் போனால் நமக்கென்ன? பேசாமல் மருந்தைக் கொடுத்துக் கொண்டு, நோயாளிகளைக் கவனித்துக் கொண்டு, வினை தரும் தண்டனைகளைப் பொறுத்துக் கொள்ளுமாறு மனிதர்களுக்கு உதவிக் கொண்டிருப்பது தானே நம் தொழில்! யார் யாரோடு போனால் நமக்கென்ன? யார் யாரைக் கைவிட்டால், விடா விட்டால் நமக்கென்ன? எவருடைய சந்தோஷத்தையோ, அது அநியாயமான சந்தோஷமாயிருந்தாலும், தடுக்க நமக்கென்ன உரிமை? அவர்கள் படப் போகிற துன்பத்தைத் தான் தடுக்கவோ, எச்சரிக்கவோ நாம் யார்?....

வேப்ப மரத்தைப் பார்த்து நின்றவர் அப்படியே அறையிலிருந்த நாற்காலியில் அமர்ந்தார். காலைத் தூக்கிச் சப்பணம் கட்டிக் கொண்டு வலது நாசியை விரலால் அமுக்கி மூச்சை உள்ளுக்கு இழுத்தார். இரண்டு விரல்களாலும் கட்டினார். மனத்தைச் சுருக்கிக் கோலி மாதிரி எங்கேயோ இடுக்கில் ஒட்டி விட்டுச் சூன்யத்தில் நிலைத்தார்.

அரை மணி ஆயிற்று. ஒரு மணி ஆயிற்று. அவர் மறுபடியும் உலகத்துக்கு வந்தபொழுது சீமை வேம்பில் ஏழெட்டுத் தினைக் குருவிகள் 'நீச் நீச்'சென்று கத்துவது கேட்டது. சுவரில் மாட்டியிருந்த முகம் பார்க்கும் கண்ணாடிக்கு முன் தொற்றியவாறு உள்ளே தெரியும் நிழல் குருவியைக் கொத்திக் கொண்டிருந்தது குருவி. என்ன கொத்தலோ-கொஞ்சலோ, பகையோ? மேலே சுவரோரமாகத் தழைந்த சட்டத்துக்குப் பின்னால் குடும்பம் நடத்திய அணிலின் இரண்டு குஞ்சுகளும் அவர் அசைவதைக் கண்டு உள்ளே பதுங்கி அவரையே கீழ்நோக்கிப் பார்த்துக்கொண்டிருந்தன. மூன்றாவது குஞ்சைத் தாய் அணில் பந்தாகச் சுருட்டி வாயில் கவ்வியவாறு எங்கிருந்தோ கொண்டு வந்து சேர்த்தது. கீழே இறக்கிய குஞ்சை மற்ற இரண்டு குஞ்சுகளும் ஏதோ கேட்பது போல் வாயை நெருங்கி ஏதோ கூறின. மறுகணம் எல்லாம் சார்ப்புக்குள் மறைந்து விட்டன.

''நான் தில்லியிலிருந்து வரும் வரையில் சந்திராவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். அதாவது ரங்கனை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்.''

அந்தக் கட்டளைதான் இப்பொழுது அவர் மனத்தில் தலைதூக்கி நின்றது.

# வெற்றி பெற இறுதி வாய்ப்பு!

## மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்

# அதிர்ஷ்டக் குழந்தை விழா



**செப்டம்பர் 14, 1961, இறுதி நாள்.**

## ரூ 8,000 பரிசுகள்

முதல் பரிசு—ரூ.46 வீதம் 7 வருடங்களுக்கு
2வது பரிசு—ரூ.29 வீதம் 7 வருடங்களுக்கு
3வது பரிசு—ரூ.22 வீதம் 5 வருடங்களுக்கு
அதோடு 100 பாராட்டுப் பரிசுகள்
ரூ. 5—அரசாங்கப் பரிசுப் பத்திரங்கள்.

மானேர்ஸ் அதிர்ஷ்டக் குழந்தை விழாவில் சேருவதற்கு உங்களுக்கு இன்னும் சில நாட்களே உள்ளன. உங்கள் குழந்தை ஜனவரி 1, 1959—ஆகஸ்ட் 1, 1961 இதற்கிடையில் பிறந்திருந்தால் விரைந்திடுவீர் உடனே! கீழே உள்ள கூப்பனை இன்றே நிரப்பி, ஒரு மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கார்டன் மேல் மூடியுடன் இணைத்து "மானேர்ஸ் லக்கீ பேபி பெஸ்டிவல், தபால் பெட்டி எண் 976, பம்பாய்—1" என்ற முகவரிக்கு அனுப்பவேண்டும். அது செப்டம்பர் 14, 1961 லோ அல்லது அதற்கு முன்போ கட்டாயம் வந்து சேரவேண்டும்.

ஒரு மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கார்டன் மேல் மூடியை அனுப்புங்கள்.




இன்றே அனுப்புவீர்! ... உங்கள் குழந்தை அதிர்ஷ்டமுடையதாக இருக்கலாம்!!



— — — — நுழைவுக் கூப்பன் — — — —

**மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் "லக்கீ பேபி பெஸ்டிவல்"**

(தெளிவாக விவரங்களை எழுதுக)

எனது குழந்தை (பெயர்) ................................................

வருடம் 19.............. ல் (நாள் & மாதம்) ................................

க்கு (மணி, நிமிஷம்) .................. காலை / மாலையில் பிறந்தது. நான் விதிகளைப் படித்தேன், இந்த விழா விதிகளுக்குக் கட்டுப்பட இசைகிறேன், நான் எனது குழந்தைக்கு மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் தருகிறேன். அதற்கு அடையாளமாக 'கார்டன்' மேல்மூடி ஒன்றினை இணைத்துள்ளேன்.

கையொப்பம் (பெற்றோர் அல்லது பாதுகாவலர்)

பெயரும் முகவரியும் ................................................

................................................

................................................

மருந்துப் பையை எடுத்துக் கொண்டு வெளியே கிளம்பி மந்தைவெளியைப் பார்க்க நடந்தார்.

ராஜாங்கம் அய்யர் வீட்டுக்குள் நுழைந்தபொழுது முன்கூடத்தில் யாரு மில்லை. ஓர் எட்டு வைத்தால் இடது கைப் பக்கம் நோயாளி படுத்திருந்த அறை. அங்கே நகர்ந்து எட்டிப் பார்த்தார்.

என்னமோ ஏதோ தெரியவில்லை. ஆனால் அந்தக் காட்சி மட்டும் அவ ருக்கு மனத்தைக் கலவரப்படுத்தியது. டொக்கி அழுது கொண்டிருந்தாள். அவள் முகத்தைப் பார்த்துக் கொண் டிருந்தது நோஞ்சான் குழந்தை. வழுக் கைத் தலையில் கை வைத்து அதிர்ந்தாற் போல் உட்கார்ந்திருந்தார் சப் ரிஜிஸ்ட் ரார் ராஜாங்கமய்யர். அந்த நோயாளி அம்மாள் எழுந்து உட்கார்ந்து கசங் கிக் கிடந்த நாலைந்து நூறு ரூபாய் நோட்டுக்களின் கசங்கலைப் பிரித்துச் சரிபண்ணிக் கொண்டிருந்தாள். அவள் கண்ணும் ரூபாய் நோட்டுக்கள் மீது இல்லை. சூன்யத்தைப் பார்த்துக் கொண் டிருந்தன. கைகள் மட்டும் இயந்திரம் மாதிரி கசங்கலைப் பிரித்துக் கொண்டி டிருந்தன. டையாளைக் காணவில்லை.

எல்லாம் ஒரே கணத்தில் அவர் கண் ணைத் தாக்கி, நெஞ்சையும் குழப்பி விட்டு விட்டன.

அவர் வந்து நின்றதைப் பார்த்து, "வாங்கோ!'' என்றார் அந்தநோயாளி அம்மாள்.

''வாங்கோ' என்றார் சப் ரிஜிஸ்ட் ரார். குழி விழும் புன்னகை இப்போது அவர் முகத்தில் வரவில்லை. ஒரு கண நேரம் கழித்து, யாரோ பிடித்து இழுக் கிறாற் போல் சிரமப்பட்டு வந்தது. மீண்டும் மறைந்து விட்டது. டொக்கி கண்ணைத் துடைத்துக் கொண்டாள். ''வாங்கோ'' என்று புன்னகையுடன் வரவேற்றாள். முகத்தில் பன்னீரைத் தெளிக்கும் போது உண்டாவது போல் தொலையும் சுகமுமாகத் தனித்தது அந்த முகம்.

''என்னம்மா, கண்ணெல்லாம் கலங்கி யிருக்கு? அழுதியா என்ன?''

''அதெல்லாம் இல்லை மாமா!''

''இல்லை. பொய் சொல்லாதே!''

''இல்லை, மாமா! அம்மா உடம்பு இப்படி யிருக்கேன்னுதான்.''

''அம்மாவுக்கு ஒரு உடம்பும் இல் லையே. அதுதான் தேறிண்டிருக்கே..''

''இவ்வளவு பலவீனமாக இருக்காளே, மாமா!''

''பலவீனம் இருந்தால்தான் புது பலம் வர இடம் இருக்கும்.''

> தேர்தல்களில் ஜெயிப்பதற்குப் பண பலம் இருந்தால்தான் முடியும் என்ற நிலை ஏற்படுமானால் இந்த உலகம் வாழத் தகுந்ததல்ல. ஜனநாயகம் என்பது பச்சைப் பொய்யாகும்.
>
> —ராஜாஜி

''உட்காருங்கள்'' என்று எழுந்து கூடத்துக்கு வந்தாள் டொக்கி.

அனந்தசாமி உட்கார்ந்ததும், தகப் பனாரின் காதில் ஏதோ சொல்லி, கையில் சில்லறையைக் கொடுத்தாள். ''இதோ வந்து விட்டேன்'' என்று சொல்லிக் கொண்டே அவர் வெளியே போனார்.

''எங்கேம்மா போகிறார் அவர்?''

''ஒன்றுமில்லை, இதோ வந்து விடு வார் அவர்.''

''காப்பி கிப்பி வாங்கப் போகிறாரா?''

''இல்லை. சர்க்கரை வாங்க. நீங்கள் இப்பொழுதாவது ஏதாவது சாப்பிட வேண்டாமா? காப்பி போட்டாச்சு: சர்க்கரை இல்லை.''

''ஏன், என்னமோ போல் இருக்கே?''

''ஒன்றுமில்லை'' என்று சொல்லிக் கொண்டே கண்ணால் கரகரவென்று கண்ணீர் வடித்தாள் டொக்கி.

''என்ன சொல்லேன்?''

மீண்டும் தலையை அசைத்து, கண் ணீரைத் துடைத்து அடக்கி, சமையல் அறையின் நிலையில் போய் நின்று கொண்டாள் டொக்கி.

அனந்தசாமி எழுந்து அவள் அருகில் போனார்.

''என்னம்மா சொல்லேன்.''

''ஒண்ணுமில்லை, எனக்குச் செத்துப் போகணும் போலிருக்கு.''

தரையைப் பார்த்துக் கொண்டு நின்றாள் அவள்.

அரையில் பட்டுப் பாவாடை, மேலே தாவணி. யௌவனத்தின் இடைகழி வழியே நடக்கும் பருவம்-அந்த இடைப் பருவத்தின் சொல்லுக்கெட்டாத, நீரோட்டம் போன்ற மென்மையும், கவர்ச்சியும் - இத்தனையும் சேர்ந்து செத் துப் போக வேண்டும் போலிருக்கிறது என்று சொன்னதைக் கேட்டதும் அனந்தசாமிக்கு ஆத்திரம் வந்தது. கறி யும் காயும் இன்னும் மனிதன்தான் பிஞ் சும் இளசுமாகப் பொறுக்குகிறான். சாவுக்குக் கூடவா இந்த ஆசை என்று அவருக்குக் குமைந்தது.

''என்ன நடந்ததும்மா?'''

''இடறென்று ஏமாற்றுகிறவர்கள் இத்தனையிலும் இருக்கிறார்களா, மாமா?''

பயத்தை உதறி, விடுதலையடைய உறுதி பூண்டால்தான் விமோசனம். காங்கிரஸ் மீண்டும் ஒரு முறை வெற்றி பெற்றால், அதன் அகம்பாவம் பன்மடங்காகி, நிர்ப்பயமாகக் கலப்படமற்ற கொடுங்கோலாட்சி நடத்திக் கொண்டு போகும். எதிர்காலத்தில் சுதந்திர வாழ்வு ஏற்படுவதற்கு வழியேயில்லாமற் போகும். —ராஜாஜி

பனிரெண்டு ரங்கன் நினைவுதான் வந்தது அவருக்கு.

''யார் உன்னை ஏமாற்றினார்கள் சொல்லு. என்னிடம் சொல்லு. பரவாயில்லை.''

அவர் நாலைந்து தடவைகள் கேட்டும் பயனில்லை.

''சொல்ல முடியாத விஷயம் என்றால் நான் கட்டாயப் படுத்தவில்லை. ஆனால் ஏமாறாமல் இருக்கிறதுதான் பெண்களுக்கு அழகு. பெண்ணுக்கு அதுதான் ஆண்மை'' என்றார் அவர்.

சிறிது நேரம் பேசாமல் நின்றாள் டொக்கி.

''பெண்ணுக்கு ஆண்மை ஏது மாமா? ஆண் பிள்ளைகள் பெண்களாக இருந்தால்தான் பெண் ஆண்மையோடு இருக்க முடியும்.''

''டொக்கி'' என்று உள்ளேயிருந்து குரல் வந்தது.

''ஏம்மா!''

''இப்படிக் கொஞ்சம் வந்துவிட்டுப் போயேன்.''

முகத்தைச் சிணுங்கிக் கொண்டே டொக்கி உள்ளே போனாள். ஏதோ கிசுகிசுவென்று பேசும் சத்தம். சற்றுக் கழிந்து, ''ம்ம்'' என்று கடுகடுத்த வண்ணம் வெளியே வந்தாள் டொக்கி. வாசல் நிலையில் நின்று எட்டிப் பார்த்து விட்டுச் சமையலறைக்குப் போய்ப் பாலை அடுப்பு மீது வைத்துவிட்டு விசிறத் தொடங்கினாள்.

''ஏதுக்கம்மா, இப்படிச் சிரமப் படறே? அவரை வேறு கடைக்கு அனுப்பி - என்ன இது?'' என்று விசாரித்தார் அனந்தசாமி.

''நடு நடுவிலே நல்ல காரியமும் ஒண்ணு ரெண்டு செஞ்சாத் தேவலைபோல் இருக்கு. அதையும் பண்ணதேன்னு சொல்லணுமா, நீங்க?''

அனந்தசாமிக்குத் திகைப்பாக இருந்தது. எவ்வளவு அழகாக, சாதுரியமாகப் பேசுகிறாள்!

''என்னம்மா, என்னென்னமோ எல்லாம் பேசுகிறாய்? எல்லாருமே, எப்பவுமே நல்லதையே செய்து கொண்டிருக்க முடியுமா? இல்லை, கெட்டதையே செய்து கொண்டிருக்கத்தான் முடியுமா? கெட்டதையே செய்து கொண்டிருக்க முடியாதே யாராலேயும்; எப்பவும்.''

''நிஜமாவா?''

''நீயே யோசித்துப் பாரேன்.''

''ஆனால் ஒரு கெட்டது செய்தால், ஒரு தடவை கெட்டது செய்தால், அதையேதான் எல்லாரும் சொல்லிக் கொண்டிருப்பார்கள்.''

''எல்லாரும் சொல்றதைக் கேட்பதற்காகவா நாம இருக்கிறோம்? நம் மனசு, ஆத்மாவெல்லாம் எங்கே போச்சு?'' என்றார் அனந்தசாமி.

''ஆமாம், மாமா!'' என்று மறுபடியும் யோசிக்கத் தொடங்கி விட்டாள் டொக்கி. கை மட்டும் குமட்டியை விசிறிக் கொண்டிருந்தது.

''நம் மனசுதான் நமக்கு முக்கியம். கெட்டதைப் பற்றி எத்தனையோ பேர் சொல்வார்கள். அதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளக் கூடாது.''

''எங்கப்பா அந்த விஷயத்திலே ரொம்ப அதிர்ஷ்டசாலி. அவர் டமாரச் செவிடு, நல்லதைக் காதில் போட்டுக் கொள்ள முடியாவிட்டாலும், கெட்டதும் காதில் விழாது. அது ஒரு பெரிய அதிர்ஷ்டம். இப்போ, கண்ணும் பொட்டையாய்ப் போயிருக்கப்படாதா என்று அவர் சாமியை வேண்டிக் கொண்டிருப்பார்.''

''ஏனம்மா, அப்படிச் சொல்கிறாய்?''

''நான் சிரிக்கிறதைப் பார்க்காமல் இருக்கலாமோல்லியோ!''

டொக்கி பேசுவதெல்லாம் எதிர் அறை வரையில் எட்டாதவாறு முணுமுணுவென்று அனந்தசாமியின் காதுகளுக்கே எட்டினதும் எட்டாததுமாக வந்தது. அவரே அதைக் கூர்ந்து கேட்க வேண்டியிருந்தது.

''இப்படி மனசைப் போட்டுக் குதறிக் கொள்ளக் கூடாதும்மா...சொல்லவும் மாட்டேன் என்கிறாய். புரியாமல் இப்படி என்னென்னவோ சொல்லிக் கொண்டிருக்கிறாய்'' என்றார் அவர்.

''பெரிய வீடாக இருந்து, அடுத்த அறைக்குக் காதில் விழாமல் இருந்தால், எல்லாம் சொல்லி அழுவேன். உங்கள் விலாசத்தைக் கொடுங்கள், மாமா! அங்கேயாவது வந்து அழுகிறேன். இல்லாவிட்டால் ரங்கன் காதிலே விழும். அவர் வந்து உங்களிடம் சொல்வார். ஆனால் அவருக்குத் தெரிந்தால், இங்கே வராமலே நின்றாலும் நின்று விடுவார்... அப்பா வந்துவிட்டாரே'' என்று கூறி நிறுத்தினாள் டொக்கி. **(தொடரும்)**

"...சந்தேகமேயில்லை, இது பின்னி துணி தான்!.."

"அவர்களின் லஸ்டலின் — அருமையான ஷர்ட்டிங், கவர்ச்சியான தோற்றம், மென்மை, நீடித்த உழைப்பு இவை நிறைந்தது .. வேறு என்ன வேண்டும்? பல வருஷங்களாக நான் இதைத் தான் அணிந்து வருகிறேன். என்னைக் கேட்டால் பின்னி துணியை விடச் சிறந்தது வேறு கிடையாது."




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணப்படும் அனுமதி பெற்ற கடைகளிலிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்கவும்.

# பின்னியின்
# லஸ்டலின்

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்

உரிமையாளர்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

JWT/BC-L-1232a




# அஞ்சறைப் பெட்டி

"காரணமில்லாமல் புருஷோத்தமனுடைய நாட்டின் பேரில் அலெக்ஸாண்டர் ஆக்கிரமிப்புச் செய்தான். எனவே அலெக்ஸாண்டர் நியாயத்துக்கு விரோதி; புருஷோத்தமனுடைய நாட்டுக்கு எதிரி. அவனோடு சண்டை போட வேண்டியது புருஷோத்தமனுடைய கடமை. புருஷோத்தமனைப் போரில் தோற்கடித்தது மல்லாமல் அவனைத் தனக்குச் சாசுவத அடிமையாகச் செய்ய அலெக்ஸாண்டர் வீரவாள் சன்மான யுக்தியைக் கைக்கொண்டான் என்று முடிவு கட்டிக் கொள்வது தான் சரியானதாகும். புருஷோத்தமன் சன்மானத்தைப் பெற்றுக் கொண்டது சூக்ஷ்மமான தேசத் துரோகமாகும்."

"எப்படி சூக்ஷ்மமான தேசத் துரோகம் என்கிறீர்?"

"சிறையிலிருந்து நம்மை விடுவித்துவிட்டார்களே என்பதற்காக வருத்தப்படும் முதல் நபர் இந்தியாவிலேயே நானொருத்திதான்" என்றார் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, விடுதலை பெற்ற சில நாட்களுக்குப் பிறகு. "வருத்தப்படுகிறீர்களா? ஏன்? எதற்கு?" என்று பலர் ஒன்றும் புரியாமல் கேட்டார்கள்.

"எரவாடா சிறைச்சாலையில் சில பூச்செடிகளை அன்புடன் வளர்த்து வந்தேன். செடிகள் மொட்டு விட்டன. அவை மலரப்போகும் தருணம்—என்னை விடுவித்துவிட்டார்கள்! இன்னும் ஒரே ஒரு வாரம் இருந்து இவற்றைக் கண்டு களித்துவிட்டுப் போகிறேனே என்று கேட்டுக் கொண்டேன். 'ஜெயிலர்' சம்மதிக்கவில்லை" என்றார் சரோஜினி நாயுடு பெருமூச்சுடன். கவிதை உள்ளத்தின் பேச்சு இது.

'புலி வருகிறது, புலி வருகிறது' என்று சொல்லிக் கடைசியில் ஒரு நாளைக்கு நிஜமாகவே புலி வந்துவிட்டாலும் அது பசியைச் சிரமமின்றிச் சுலபமாகத் தீர்த்துக் கொள்ள நினைக்கும் வலிமையற்ற கிழட்டுப் புலியாகத்தான் இருக்கும். இளமை மிடுக்குக் கொண்ட புலிகள் மான், பன்றி போன்றவற்றைக் காட்டில் துரத்திச் சென்று வேட்டையாடி உண்பதையே விரும்புகின்றன. இந்தியாவில் வருஷத்தில் 32,000 ஆடு மாடுகள் கிழட்டுப் புலிகளுக்குப் பலியாகின்றன. 130 மனிதர்கள்வரை உயிர் துறக்கிறார்கள். 10 அடி நீளமும் 500 பவுண்டு எடையுமுள்ள புலிகள் மிகக் கொடியவை; பசிக்குக் கொல்வதுடன் ரத்த வெறிக்காகவே கொலைச் சதிசெய்யும் சித்தம் படைத்தவை என்றெல்லாம் கூறுவது தவறு. மனிதனுக்குத்தான் இந்த இயல்புகள் உண்டு!

இரண்டாம் உலக மகா யுத்தத்தின்போது இந்தியர்கள் எவ்விதத்திலும் பிரிட்டனுக்கு உதவக் கூடாது என்றார் ஒருவர். அரசாங்கம் அவரைச் சிறையில் தள்ளியது. அங்கே அரசியல் கைதிகளின் நிலையைக் கண்டு அவர்கள் சார்பிலே இருபத்தி மூன்று நாட்கள் உண்ணா விரதம் மேற்கொண்டார். சர்க்கார் சூழ்ச்சி செய்தது. தாறுமாறாக ஒரு கடிதத்தைத் தயாரித்து அதனை அந்த நபர் தமது மனைவிக்கு எழுதினார் எனக் கூறி வெளியிட்டது. அந்தக் கடிதம் ஒரு மோசடி என்பது நிரூபணமாகும் தருணத்தில் அம்மனிதர் தமது கைவரிசையைக் காட்ட ஆரம்பித்தார். 1942ம் வருஷம் தீபாவளி தினத்தன்று ஜெயிலில் ஒரே களேபரம்! அந்தக் கைதி தமது சகாக்கள் ஐவருடன் தப்பி ஓடிவிட்டார்! வேஷ்டிகளை ஒன்றோடொன்று சேர்த்து முடிந்து கயிறாகப்

அன்புள்ள ஸ்ரீ தருக்குக் கோபு எழுதியது.

டேய்! நான் ரொம்பவும் நல்லவனாகிவிட்டேன். காலையில் ஐந்து மணிக்கு எழுந்து விடுகிறேன். ஒரு மணி நேரம் ஆசனம் போடுகிறேன். எட்டரை மணிக்குச் சாப்பிட்டுவிட்டுக் கையில் 'டிபன் பாக்ஸு'டன் ஆபீஸுக்குக் கிளம்புகிறேன். ஆம், இடைவேளையில் ஓட்டலுக்குப் போய்ப் பணம் செலவழிப்பது கிடையாது. காப்பிகூட அருந்துவதில்லை. ஐந்தரை மணியானதும் நேராக வீட்டுக்கு வந்து சேருகிறேன். ஊர் சுற்றுவதே கிடையாது. சினிமா, நாடகம் போன்ற பழக்கங்களை அடியோடு விட்டு விட்டேன். ஒரு சிகரெட் கூடப் பிடிப்பதில்லை. பார்த்துக்கொள்ளேன்! இதையெல்லாம் படிக்க உனக்கு ரொம்பச் சந்தோஷமா யிருக்கிறதல்லவா?



"அதுதான் அலெக்ஸாண்டர் கைக்கொண்ட ராஜதந்திரத்தின் அழகு. எதிரியாக இருந்தாலும் திறத்தைப் பாராட்டக் கூடாதா என்று நீ கூட ஏமாந்துபோய்ச் சொல்லும்படியாக அந்த ராஜதந்திரம் அவ்வளவு அழகான சூக்ஷ்மத்தோடு அமைந்திருக்கிறதல்லவா? நாட்டின் விரோதியோடு, நியாயத்தைக் காலால் மிதித்துக் காரியம் செய்பவனோடு சல்லாபம் செய்வது தெளிந்த துரோகமாகும்."

"கணபதிராயா! ஒரு செயல் பார்வைக்கு நேர்மையுள்ளதைப் போல் இருக்கலாம்; ஆனால் அதனை ஊடுருவிப் பார்த்தால் அதன் இயல்பான கெட்ட தன்மை தெரியும் என்பதை நீ எனக்கு எடுத்துக் காண்பித்ததற்காக வந்தனம்." —வ. ரா.



டீ அருந்த அமர்ந்தால் சர்க்கரையை ஆசையுடன் அள்ளிப் போட்டுக் கொள்வார் ஸ்ரீமதி சரோஜினி. அதனால்தானோ என்னவோ அவரது பேச்சில் அத்தனை இனிமை! அதிலே கட்டுண்டார் ஓர் எழுத்தாளர். (Aldous Huxley) இந்திய அரசியல்வாதிகள் அனைவரும் சரோஜினி போல இருந்துவிட்டால் இந்தியாவுக்கு நல்ல காலம் பிறக்கும் என்று எழுதியிருந்தார். இது பற்றி ஸ்ரீமதி நாயுடு கூறினார்: "என்னை ஏன் அனைவரும் அரசியல்வாதிகளுடன் சேர்க்கிறார்கள் என்பது புரியவேயில்லை. நான் அவ்வாறு பாவமொன்றும் செய்ததில்லையே?" கவிக்குயிலை அரசியல்வாதியாக்கப் பார்த்தால் அவர் மனம் எப்படிப் பொறுக்கும்?



பூனைக் குடும்பத்தைச் சேர்ந்த புலி போன்ற மிருகங்களுக்கு இருட்டில் நிச்சயமாகக் கண் தெரியாது. ஆனால் மங்கலான வெளிச்சத்தில் அவற்றால் நன்றாகப் பார்க்க முடியும். ஆகவே தான் இரவு நேரங்களில் புலிகள் வேட்டையாடுகின்றன.

தாய்ப் புலி ஆறு குட்டிகளைப் போட்டால் அவற்றில் இரண்டுக்கு மேல் சாதாரணமாகச் சில மாதங்களுக்குப் பிறகு உயிர் வாழ்வதில்லை. சூழ்நிலை அப்படி. உணவு கிடைக்காமல் போகும்; அல்லது வேறேதேனும் ஆபத்துகள் நேரலாம். ரொம்பவும் உணவுத் தட்டுப்பாடு ஏற்பட்டால் தாய்ப்புலி தன் குட்டிகளுள் ஒன்றையே புசித்து விடும்!



பயன்படுத்தினார்கள், சுவரேறிக் குதிக்க. தேசம் வியந்தது! மூன்று நாட்கள் அன்ன ஆகாரமின்றி ஐம்பத்தாறு மைல் நடந்து கயாவை அடைந்தார்கள். காடுகளிலும் மலைகளிலும் நகரங்களிலும் கிராமங்களிலும் தேடினார்கள் போலீஸார். பிடித்துத் தருவோருக்குப் பத்தாயிரம் ரூபாய் பரிசு தருவதாகக் கூறினார்கள். ஆனால் நாளைக்கொரு வேஷம் போட்டு ஊர் ஊராய்ச் சென்று தேச பக்தர்களை ஊக்குவித்து வந்தார் அந்த அதிசய மனிதர்!

சாந்தமே உருவெடுத்த வினோபாஜியுடன் சர்வோதய வேலைகளில் ஈடுபட்டிருக்கும் ஜெயபிரகாஷ்தான் அன்று பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கதிகலங்க அடிக்கும் காரியங்களைச் செய்துவந்தார்;



தடிப்பயலே! நான் அவஸ்தைப்படுவதைக் கண்டு உனக்கு ஆனந்தமா? அப்பா பணத்தைச் செலவழித்துக் கொண்டிருந்த வரையில் எல்லாம் ஜாம் ஜாமென்றுதான் நடந்தது. இப்போது நாசமாய்ப் போகிற எவனோ எனக்கு வேலை கொடுத்து விட்டான். சொந்தமாகச் சம்பாதிக்க ஆரம்பித்ததும் அப்பா பணம் இறைப்பதை நிறுத்திவிட்டார். எனக்குக் கிடைக்கும் சம்பளத்துக்கு இந்த ஆர்ப்பாட்டமெல்லாம் கட்டி வருமா? இத்தனை பழக்க வழக்கங்களையும் எனக்கு உண்டாக்கியது நீதான் என்பதை நான் மறக்கவில்லை. ஆகவே உடனே என் சங்கடத்தைத் தீர்க்க ஐம்பது ரூபாய் பணம் அனுப்பிவைக்கவும்.

இப்படிக்கு, கோபு



# வெள்ளிப் பனிமலை வீதியிலே

## 4. கல் மழையும், சொல் மழையும்

சீறும் வெள்ளத்தை அநுபவித்துத் தெளிந்தபின், தவறிய வழியிலிருந்து நேரான வழிக்கு வந்திருந்த நாங்கள் கங்கை வெள்ளத்தைக் கடப்பது எப்படி என்று தயங்கி நின்றோம். எதிரில் ராம் கங்கா நதி சீறிப் பாய்ந்து கொண்டிருந்தது.

இங்கே பொதுவாக நதியைக் கடப்பதற்கு இரு வழிகள் உண்டு. 'ஜூலா' என்றும் 'தூலி' என்றும் அந்த வழிகளுக்குப் பெயர். 'தூலி' என்பது வளைவான கட்டையொன்றை மார்பில் அணைத்து இரும்புக் கயிற்றில் இணைத்துத் தலைகீழாகக் கால்களைக் கம்பியின் மீது போட்டுக் கொண்டு நீந்தி வருதல். 'தூலி'யின் மூலமாக ஆற்றைக் கடப்பதில் இந்தப் பக்கத்து மலைவாசிகளுக்குத்தான் அநுபவம் அதிகம். ஜூலா என்பதில் பாலத்துக் கட்டைகளின் மேல் உறுதியான இரும்புக் கயிற்றைப் பொருத்தி ஒரு வளைவுக்கட்டையை மாட்டி அதன் இரு புறங்களிலும் கயிறுகளைத் தொங்க விட்டு அதில் ஒரு மரப் பலகையைச் சேர்த்து (பார்ப்பதற்கு நம் நாட்டு ஊஞ்சல்போலக் காணப்படுகிறது.)

**என்.வி. அனந்தராமன்**

தொங்க விட்டிருக்கிறார்கள். அதில் நம்மை உட்கார வைத்துக் கயிற்றினால் இறுகக் கட்டி விடுகிறார்கள். ஜூலாவில் கை கால்களை விருப்பப்படி ஆட்ட முடியாது. ஜூலாவின் இருபுறத்திலும் நீண்ட கயிறுகள் கட்டப்பட்டிருக்கும். ஆள் சரியாக அமர்ந்தவுடனே மறுபுறத்திலிருந்து கயிற்றை மெதுவாக இழுப்பார்கள். அவர்கள் இழுக்க இழுக்க இக்கரையிலுள்ளவர்கள் கயிற்றைத் தளர்த்திக் கொண்டே போவார்கள். ஜூலாவும் அக்கரை போய்ச் சேர்ந்து விடும். நம்மூர்த் தெப்பத் திருவிழாவில் தெப்பம் இழுப்பதுபோல் இருக்கும். கயிறு மட்டும் அறுந்ததோ, ஜூலாவில் போகிறவர்களின் கதி அதோகதிதான். எங்கள் யாத்திரைக்குழுவில் ஜூலாவின் ஆபத்தைப்பற்றி அக்கறை செய்யாமல் அக்கரை போவதற்குத் துணிந்த முதல் ஆள் நான்தான். மற்றவர்கள் என்னைப் பின்பற்றினார்கள்.

ஜூலாவில் போகும்போது மழை வேறு கொட்டத் தொடங்கி விட்டது. எல்லோரும் அக்கரையை அடைந்த பின் மழையில் வழுக்கியும் தடுமாறியும்,- மேலும் ஒரு மைல் நடந்தோம். 'வழுக்கி வீழினும் உன் திருப்பெயர் அல்லால் மற்று நான் நினையேன்'—என்றாற்போலக் கயிலாயநாதரின் திருப்பெயரையே நினைத்துக் கொண்டு சென்றோம்.

ஆனால் என்ன சோதனை? கனத்த மழையினால் மலையிலிருந்து பாறைகள் உருண்டு விழுந்தன. ஒதுங்கியும், பதுங்கியும் நடந்தோம். சில இடங்களில் உருண்ட கற்கள் குவிந்து நாங்கள் போக வேண்டிய பாதையையே அடைத்திருந்தன. மெல்ல மெல்ல இருளும் கவிந்துகொண்டு வந்தது. இந்த மலைப் பிரதேசங்களில் தெய்வ நம்பிக்கைதான் பெரிய துணை. நம்முடைய புத்திசாலித்தனத்தினாலும், சாமர்த்தியத்தினாலும் எதுவும் நடப்பதில்லை. நடந்து விடும் என்று கர்வப்படுவதற்கும் இடமில்லை.

இனி மேலே என்ன செய்வதென்று தோன்றாமல் திகைத்து நின்றோம். சுற்று முற்றும் பார்த்தபோது கீழே மலைச்சரிவில் ஒரு கிராமம் தென்பட்டது. அங்கே போய்த் தங்கலாம் என்று நான் முதலில் சரிவிலே இறங்கினேன். என் பூட்ஸில் தண்ணீர் புகுந்து வேதனைப் படுத்தியது. சேற்றில் வழுக்கியது. உருண்டு புரள நேர்ந்தது. 'மேலே போகாதே! திரும்பி விடு'- என்று நண்பர்கள் நின்ற இடத்திலிருந்து கூச்சலிட்டனர். சரிவின் பயங்கரத்தை உணர்ந்து நண்பர்கள் கூறியதே சரி என்று நானும் திரும்பி விட்டேன்.

எல்லாரும் முன்பு நின்ற இடத்திலேயே திகைத்து நின்றோம். என்ன செய்வதென்று தெரியவில்லை. முன்னால் போவதற்கும் வழி புலப்படாமல் பின்னால் இரும்பவும் தோன்றாமல் நின்றோம். எங்களில் சிலர் தங்களிடமிருந்த சிவப்புத் துண்டுகளை விரித்து உயரப் பிடித்துக் காட்டிச் சரிவின் கீழே யிருந்த கிராமத்தை நோக்கிக் கூச்சலிட்டார்கள்.

யாருக்கு எது வேண்டுமென்று தானே யறிந்து வேண்டியதெல்லாம் வேண்டிய நேரத்தில் அளிக்கும் கயிலைநாதன் செவிகளில் எங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்களின் கூக்குரல் விழுந்தது போலும். எங்களுக்கு வழி பிறந்தது. துணையும் வாய்த்தது. மறுபுறத்திலிருந்து குடையும், கையுமாக யாரோ ஒரு பெரியவர் வந்து கொண்டிருந்தார். அந்தப் பெரியவர் எங்கள் அச்சத்தைப் போக்கி வழியும் கூறி உடன் வந்து உதவி செய்தார்.

"பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. இந்த மாதிரி மழை மூட்டமும், எதிர்பாராமல் திடீர் திடீரென்று மலைகள் சரிவதும், பாதை அடைபடுவதும் இங்கே சர்வ சாதாரணமான

**கௌரி கங்கை பிறக்குமிடம்**



நிகழ்ச்சிகள்தாம். இவற்றைப் பார்த்து அதைரியப்படுதல் கூடாது'' என்று எங்களுக்கு உற்சாக மூட்டினார் அந்தப் பெரியவர்.

எங்களை அழைத்துப் போவதற்காக வழி காட்டிக்கொண்டு அவர் கீழே இறங்கினார். கற்கள் உருண்டு விழுந்தன. சிறிது விலகிக் கொண்டு மீண்டும் திரும்பினார். தைரியமாக இறங்கினார். ஒருமுறை அவரே கடைசி வரை இறங்கிச் சென்று வழியைச் சோதனை செய்து பார்த்தபின் மீண்டும் வந்து எங்களை அழைத்துக்கொண்டு போனார். 'தடுத்தாட்கொள்ளுதல்'-என்று இறைவனின் கருணை பற்றிச் சொல்வார்களே, அப்படி எங்களைத் தடுத்தாட் கொண்டார் அவர்.

"வேண்டத் தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ"

என்று மாணிக்கவாசக சுவாமிகள் பாடியிருப்பது எனக்கு நினைவு வந்தது. நாங்கள் வழி மயங்கி அஞ்சித் தவித்தபோது எங்களுக்கு வேண்டிய வழியை வேண்டிய அளவு காட்டிய பெரியவரை நாங்கள் சந்திக்கும்படி செய்த திருவருளை எப்படிப் புகழ்வது? வேண்டத் தக்கது அறிந்து வேண்டியதெல்லாம் தரும் வள்ளன்மை அல்லவா அந்தக் கருணை!

அந்தப் பெரியவரை வாழ்த்தி நன்றிகூறி விட்டு எங்கள் அருள் வழி நடையைத் தொடர்ந்தோம். நாங்கள் இரண்டாவது மலைச் சரிவை அடையும் நேரத்தில் நன்றாக இருட்டி விட்டது. டார்ச் விளக்குகள் ஒளியைக் காண்பித்தன. அந்த இருள் வெள்ளத்திலே டார்ச் ஒளி மின்மினிப் பூச்சிகள் மின்னுவதுபோல் தெரிந்தது. அந்த ஒளியின் துணையைக்கொண்டே நடந்தோம். இருட்டில் எந்தச் சிறிய ஒளியும் பெருதவி அளிப்பது தான். இருளிலும், மழையிலும் இயல்பாக ஏற்படக் கூடிய பல துன்பங்களை அடைந்தும் பொறுமையைக் கைவிட்டு விடாமல் தொடர்ந்து நடந்து 'க்விடி'-என்னும் இடத்தில் போய்த் தங்கினோம். நாங்கள் அங்கே போய்ச் சேர்ந்தபோது இரவு ஒன்பது மணி. எங்களில் பல பேருடைய படுக்கைகள் வந்து சேரவில்லை. இருந்தவற்றை நிரந்துகொண்டு எல்லாரும் ஒருவிதமாக நித்திரை என்னும் யாத்திரையைத் தொடர்ந்தோம்.

மறுநாள் காலை விடிந்து எட்டு மணிக்கு மேல் ஆகியும், எங்கள் குழுவில் கலந்து கொள்வதற்கு வந்து சேரவேண்டிய சுவாமி வித்தியானந்த சரஸ்வதி வந்து சேரவில்லை.

எங்களோடு வந்திருந்த கூலியாள் ஒருவனை அனுப்பிச் சுவாமிகளை அழைத்து வரச் செய்தோம். அவரும் வந்து சேர்ந்தார்.

விடிந்ததும் க்விடியிலிருந்து பதின்மூன்று மைல்களுக்கு அப்பாலிருந்த 'டிக்பெயன்' என்னும் கிராமத்துக்குப் புறப்பட்டோம். சிறிது தொலைவு சென்றதும் உலகப் பிரசித்தி பெற்ற பஞ்சசூலி சிகர தரிசனம் கிடைத்தது. நாங்கள் நின்று கொண்டிருந்த இடத்திலிருந்து எட்டு மைல் தொலைவுக்கு ஒரே செங்குத்தான மலை ஏற்றமாகத் தெரிந்தது. விரைவாக நடக்க முடியாததால் மெதுவாக நடந்தோம். பகல் பதினொரு மணியளவில் 'பிர்காம்' என்னும் மலையடிவாரத்தை அடைந்து பகல் உணவை முடித்துக்கொண்டு பயணத்தைத் தொடர்ந்தோம்.

மறுபடியும் பலமாக மழை பிடித்துக் கொண்டது. மழை நீர்ப்பெருக்கு ஒருபுறம், சறுக்கலும் வழுக்கலும் நிறைந்த குழிகள் மற்றொருபுறம். சில்லிட்ட கால்கள் தரையின் மேல் நடக்கும்போது பனிக்கட்டியை மிதிப்பதுபோலிருந்தது. தட்டுத் தடுமாறிக் குழிகளில் விழுந்து விடாமலும், பள்ளத்தில் உருண்டு விடாமலும் நடப்பதற்கு நாங்கள் பட்ட பாட்டை நினைத்தால் விரைவில் நடனம் கற்றுக்கொண்டு விடலாம் போல ஆகிவிட்டது. இரத்தத்தை உறிஞ்சும் அட்டைகளின் தொல்லை வேறு. இமயமலை அட்டைகள் எந்த விதத்திலும் இரத்தத்தை உறிஞ்சுவதில் வேறு நாட்டு அட்டைகளுக்குச் சளைத்தவை அல்ல. அட்டையைப் பற்றிய பயத்திலும் நாங்கள் கால்களைக் கவனித்துக்கொண்டே நடந்து போயிருந்தும் எங்கள் முன்னெச்சரிக்கையையும் மீறி அட்டைகள் எங்களில் சிலருடைய கால்களை மிக நன்றாகக் கவனித்துச் செய்ய வேண்டியதைச் செய்திருந்தன.

டிக்பெயன் போகும்வரை ஏறக்குறையப் பதின்மூன்று மைல்களுக்கு வழியின் இருபுறமும் பயங்கரமான அடவி. புலி முதலிய காட்டு விலங்குகளின் நடுக்குறும் ஒலிகளுக்கும் குறைவில்லை.

ஒருவிதமாக நாங்கள் டிக்பெயனை அடையும் போது இரவு எட்டு மணி ஆகியிருந்தது. டிக்பெயனில் நாங்கள் இருந்த இடம் ஒரு மாட்டுக் கொட்டகைக்கு அருகில் அமைந்தது. பேர்தான் மாட்டுக் கொட்டமே ஒழிய, கொசுக்களின் கொட்டம் தான் அங்கே அதிகம். கைலாய வழியில் கொசுக்கள் சிவஇம்சை செய்யாத சைவக் கொசுக்களாயிருக்கும் என்று நினைத்து ஏமாந்தோம்.

டிக்பெயனைச் சூழ்ந்துள்ள பிரதேசத்திற்கு 'மான்ஷியாரி' என்று பெயர். மான்ஷியாரி பகுதியில் அரசாங்கத்தாரால் நடத்தப்படும்



மத்திய சர்க்கார் நிதி இலாகா துணைக் காரியதரிசி எம். கே. வெங்கடாசலத்தின் புதல்வியும் தில்லி நாட்டிய கலாலய மாணவியுமான குமாரி மீராவின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் புதுதில்லியில் விமரிசையாக நடந்தது. அரங்கேற்றம் ஏற்றமுடன் அமைந்து சபையோரிடம் சபாஷ் பெற்றார் குமாரி மீரா.

உயர்நிலைப்பள்ளி ஒன்றும், கல்லூரி ஒன்றும் ஆட்டு உரோமங்களைச் சுத்தம் செய்து கம்பளி தயாரிக்கும் நெசவுச் சாலை ஒன்றும் இருக்கின்றன. இதற்கு அருகில் 'காலாமுனி' என்னும் பெரிய மலை ஒன்று இருக்கிறது. உலகத்தில் எத்தனை வகை மூலிகைகள் உண்டோ அவ்வளவும் இங்கே இருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

இப்பிரதேசத்தில் இயற்கை நிகழ்த்தும் விந்தையொன்று உண்டு. பனிக்காலங்களிலே பனி விழுந்து கௌரி கங்கையும், அதைச் சேர்ந்த உப நதிகளும் வெள்ளியாக உறைந்து விடும். ஏப்ரல் மாதத்தில் கடுமையான வெயில் காரணமாகப் பனி உருகித் தரை நன்றாகத் தெரியும். அந்தச் சமயத்தில் இந்தப் பிரதேசம் முழுதும் வெள்ளி ஓடைகள் மயமாய் விளங்கும். ஏப்ரல் மாதத்துக்குப் பிறகு தான் இப் பிரதேசத்துக்கும் மேலே உள்ள 'மீலம்' வரை மக்கள் போய் வருவதற்கு முடியும். ஜூன் மாத நடுக் காலத்தில் தான் திபெத்துக்குப் போகும் வழிகள் தெளிவாக இருக்கும். ஆண்கள் வியாபார நிமித்தம் திபெத்துக்குச் செல்வார்கள். பெண்கள் நிலங்களில் சாகுபடி வேலைகளைச் செய்வதற்காகத் திபெத்துக்குச் செல்வார்கள். இதனால் தொழிலை ஒட்டியே கயிலாய யாத்திரையும் இவர்களுக்கு இயல்பாகக் கிடைத்துக் கொண்டிருக்கிறது.

டிக்லையனிலிருந்து புறப்பட்டு ஆறுவது மைலில் இருந்த வீலம் என்ற கிராமத்தை நோக்கி நடக்கலானோம். அந்த ஊர் பெரிய நதி ஒன்றின் மறு கரையில் இருந்ததால் எளிதாகப் போய்ச் சேர முடியவில்லை. மாலை வரையில் நேரமாகி விட்டது. வெள்ளை வெளேரென்று நிர்மலமாக இருந்த ஆகாயம் திடீரென்று மாறியது. அலைகள் திரண்டு ஆர்ப்பரித்து வருவதுபோல மேகங்கள் திசைகளையெல்லாம் மூடி நின்றன. சிறிது நேரத்தில் பேய்க்காற்றும் மழையுமாக இயற்கைவெறி கொண்டு புறப்பட்டதுபோல் வானம் பொழிந்தது. நம் பக்கத்தில் ஆலங்கட்டி மழை என்று சொல்கிறார்களே; அந்தமாதிரிக் கற்களை வீசி அடிப்பதுபோல் மழை விழுந்தது.

மேலே தொடர்வது புத்திசாலித்தனமில்லை என்று எங்களுக்குத் தோன்றியது. நடுவழியிலேயே கூடாரம் அடித்துக்கொண்டு தங்குவதற்கு எண்ணினோம். எங்களைப் பின் தொடர்ந்து வந்த சுவாமி வித்தியானந்த சரஸ்வதி அவர்கள் வந்த வழியாகவே ஒரு மைல் திரும்பி இரண்டு மைல் மேலே ஏறினால் மலைக்குகை ஒன்று இருப்பதாகவும், அங்கே தங்கிவிட்டு விடிந்ததும் முன்னேறலாம் என்றும் கூறினார்கள். 'வந்த வழியே திரும்புவதா?' என்று மலைத்தோம். ஆனால் வேறு வழியில்லாததனால் சுவாமிகளின் அறிவுரைப் படியே குகைக்குத் திரும்பினோம். எல்லாரும் கைகால்களை நீட்டிப் படுக்கக் குகையில் இடமில்லை.

இரவு முழுதும் விடாமல் மழை பெய்து கொண்டே இருந்தது. இந்நிலையில் வித்தியானந்த சரஸ்வதி அவர்களைக் கதைக் கருத்துக்கள் பற்றிச் சொற்பொழிவு செய்யச் சொல்லி, கேட்கத் தொடங்கினோம். (தொடரும்)




எல்லார்வி

கதை சொல்வதும் கேட்பதும் பழங்காலத்திலிருந்து நம்மிடம் தொடர்ந்து வரும் பழக்கங்கள். சுவை படச் சொல்வது, சுவாரசியமாகக் கேட்பது, —இவை அப்பழக்கங்களின் வளர்ச்சிபெற்ற நிலை. நம் பாட்டிமார்களும் பாட்டன்மார்களும் எளிதாகப் புரிந்த செயலை இன்று கடினமாக ஆக்கிக் கொண்டு வெற்றி எங்கே, எங்கே என்று அலைப்புறுகிறோம். 'அப்பட்டமான உண்மை இனிக்காது; வெறும் அழகு ரசிக்காது; அலங்காரமும் கூடவேண்டும்' என்று பெருகி வந்து விட்ட மனோபாவம்தான் காரணம்.

பாடும் பயனும் ஒன்றை ஒன்று தழுவி நிற்பது உண்டு; இடத்தாலும் காலத்தாலும் பிரிந்து நிற்பதும் உண்டு. நாவல் இலக்கிய முயற்சியும் அதற்குரிய பாடும் அதன் பயனும் அப்படியேதான்.

நாவல் பிறந்த கதையைச் சொல்கிறபோது அதை ஒட்டிய சிறு சிறு நிகழ்ச்சிகளையும் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. மரத்துக்கு ஆணி வேர் மட்டுமே முக்கியம் இல்லை; சல்லி வேர்களும் இன்றியமையாதவையே.

'நாவல் பிறக்கிறது' என்ற தலைப்பில் 'முதல் நாவல்' பிறந்த கதையைச் சொல்வது ஒன்று; 'சிறந்த நாவல்' பிறந்த கதையைச் சொல்வது மற்றொன்று. முதல் நாவலே சிறந்த நாவலாக இருந்து விட்டால் ஒரு பகுதி வேலைக் குறைவு.

இங்கே, என்னுடைய 'முதல் நாவல்' பிறந்த கதையை முதலில் சொல்கிறேன்; அடுத்து எனக்குத் திருப்தியளித்த மூன்று நாவல்களைக் குறிப்பிடுகிறேன்; இறுதியில், 'சிறந்த நாவல்' பிறந்த விவரத்தைக் கூறுகிறேன்.

பத்தாவது வயதில் கதை படிக்கும் பித்து என்னைப் பீடிக்கத் தொடங்கியது. பதினைந்தாம் பிராயத்துள் பெரிய பெரிய கதைகளை ஜீரணிக்கத் தொடங்கி விட்டேன். ஜே.ஆர். ரங்கராஜு, ஆரணி, வடுவூர், வை. மு. கோ. முதலியோர் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டனர். பாடப் புத்தகம் பக்கத்தில் இருக்கும்; நாவல் கையில் இருக்கும். தகப்பனாரின் குரலோ, காலடி ஓசையோ கேட்டால் நாவலைக் கீழே வைத்து, அதன் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு பாடப் புத்தகத்தை விரித்து வைத்துக் கொள்ளுவேன். அவர் அப்பால் சென்றதும் நாவல் படிக்கத் தொடங்குவேன்.

எங்கெங்கோ சென்று, யார் யாரையெல்லாமோ சிநேகம் பிடித்து, கெஞ்சிக் கூத்தாடி அவர்கள் ஏவும் பணிகளை அயராமல் செய்து, நாவல்களை இரவலாகப் பெற்றுப் படிப்பதுதான் இளமையில் என் முழு வேலை. இரவில் எல்லாரும் தூங்கியபின், விடிவிளக்கைக் கொண்டு வந்து தலைமாட்டில் வைத்துக் கொண்டு விடிய விடிய நாவல் படிப்பேன். கண்களில் நீர்ப் பெருக்கெடுத்துப் பொட்டுக்களின் வழி தாரையாக ஓடும். ஒரே நிலையில் படுத்திருப்பதால் உடம்பில் வலி எடுக்கும். நாவலின் சுவாரசியத்தில் எனக்கு எதுவுமே உறைக்காது.

பதினெட்டாம் பிராயத்துள், 'இனி புதிதாக ஏதாவது நாவல் வந்தால்தான் உண்டு' என்கிற அளவுக்கு அநேகமாக எல்லாத் தமிழ் நாவல்களையுமே படித்து முடித்து விட்டேன். அதன் விளைவாக என் மனம் எப்போதும் கதைகளின் போக்கிலே சுழன்றவண்ணம் இருந்தது.

என் தமக்கைக்கு ஒரு பேரன். நடனபாதன் என்று பெயர். என் மார்பின் மீதும் தோளின் மீதுமே வளர்ந்து வந்தான். ஏழெட்டு வயதானதும் அவனையும் கதைப் பைத்தியம் பற்றிக் கொண்டது. இரவில் என் கழுத்தை இறுகக் கட்டிக் கொண்டு கதை சொல்லும்படி தொந்தரவு செய்வான். ஒவ்வொரு நாளும் இதே பல்லவிதான்.

'பாட்டி கதைகள்' தீர்ந்தன. பின்னர் நாடோடிக் கதைகள். அவையும் தீர்ந்ததும் ராமாயணக் கதைகள். பாரதக் கதைகள், பாகவதக் கதைகள், உதிரிப் புராணக் கதைகள்-இப்படி எனக்குத் தெரிந்தவற்றையெல்லாம் சொல்லித் தீர்த்தேன். அவனுடைய கதைப் பசி அடங்குவதாக இல்லை. சிறுவன், ஒரு கதையைக் கேட்டுக் கொண்டே, அல்

வது கேட்டு முடிந்ததும் தூங்கினால் பரவாயில்லை. ஒரே இரவில் இரண்டு மூன்று கதைகள் என்றால்? கதை சொல்லிக் கொண்டே நான் தூங்கி விடுவேன்; சொல் குழறும். ''என்ன மாமா, உளர்றே?'' என்று என்னை அவன் உசுப்புவான். ஒரே கதையை நீட்டிச் சொன்னால் ''வளர்த்தாதே, மாமா; அப்புறம் என்ன?'' என்பான். அவனுடைய பதினொன்றும் வயதுக்குள் என்னிடமிருந்த 'ஸ்டாக்' முழுவதையும் தீர்த்து விட்டான். 'இனி என்ன செய்வது?' என்று நான் விழித்துக் கொண்டிருக்கையில் வைகுண்ட ஏகாதசி வந்து சேர்ந்தது.

ஸ்ரீஜயந்தி, சிவராத்திரி, வைகுண்ட ஏகாதசி என்றால் சிறுவர் சிறுமியருக்குக் கொண்டாட்டம். இரவு முழுதும் கண் விழிப்பதாகச் சங்கற்பம் செய்து கொண்டு முன் இரவில் சற்று நேரம் ஏதாவது விளையாட்டுக்களில் ஈடுபட்டிருந்துவிட்டு, மற்ற நாட்களைவிட முன்னேரத்திலேயே தூங்கிப் போய் விடுவார்கள். நடனபாதன் அவர்களோடு சேருவதில்லை. அவன் குறி வேறு!

''மாமா! விடிய விடியக் கதை சொல்ல வேண்டும்'' என்று காலையிலிருந்தே என்னைக் கெடுபிடி செய்து வந்தான். என் தோல்வியை அவனிடம் காட்டிக் கொள்ள எனக்கும் விருப்பமில்லை; ஆகவே இரவு ஒன்பது மணிக்குக் கதை சொல்லத் தொடங்கினேன். புதிய பாத்திரங்களைப் படைத்து, சுவையான நிகழ்ச்சிகளை அமைத்து, முற்றும் புதிய பொய்க் கதை ஒன்றைச் சொல்லிக் கொண்டே போனேன். நேரம் செல்லச் செல்ல, கற்பனை வளமாகச் சுரந்து கொண்டே போயிற்று. சிறுவன் உணர்ச்சி வசமாகித் துள்ளிக் குதித்தான்.

பொழுது விடிந்து விட்டது; கதை முடியவில்லை. மறு நாள் இரவிலேதான் முடிந்தது. என் முதல் கதை அது. நடனபாதன் என்னிடம் கேட்ட கடைசிக் கதையும் அதுதான். அடுத்த சில நாட்களில் 'டைபாய்ட்' அவனைப் பலி கொண்டது. கதை சொல்லும் என் வாயும் அடைத்துப் போயிற்று.

என்னுடைய இருபதாம் பிராயத்தில் என் தந்தையார் காலமானார். தாயுடன் கீரனூர் கிராமத்தில் இருந்தேன். பிழைப்புக்கு வழி புரியவில்லை. காலையிலும் மாலையிலும் மரங்களடர்ந்த சாலைகளில் உலவுவேன். ரயில் சாலை மதகின் மீது அமர்ந்து கதிரவனின் தோற்றத்தையும் மறைவையும் ரசிப்பேன். வேளையில் உண்பதும் சங்கீதக்காரர்களோடு பொழுது போக்குவதுமாக இருந்தேன். இவற்றின் இடையே ஏதாவது கிறுக்கிக் கிறுக்கும் விஷமச் செயலும் தொடர்ந்தது. இதன் விளைவாக, உருப்படியாக ஒரு கதை எழுத வந்தது. எழுத எழுத முன்பொருநாள் வைகுண்ட ஏகாதசி இரவில் - நடனபாதனுக்குச் சொன்ன கதை மளமளவென்று நினைவில் வந்தது. முழு மூச்சில் எழுதலானேன். ஒன்றரை மாத அளவில் முழு நாவல் உருவாயிற்று. படித்துப் பார்த்து அடித்துத் திருத்தி மறு பிரதியை எடுத்து முடித்தேன். அதன் தரம் எப்படி என்பதும் புரியவில்லை; அதை என்ன செய்வதென்பதும் தெரியவில்லை.

ஊரில் பலர் என்னைப் 'பைத்தியம்' என்றார்கள். 'பிழைக்க வழி தெரியாதவன்' என்றார்கள்; 'காலிப் பயல்' என்றனர். எனக்கு மட்டும் ஒரு முழு நாவலை எழுதி விட்ட திருப்தி; அது நன்றாயிருப்பதாகவும் எண்ணம்; சிறிது கர்வம்கூட!

நண்பர்கள் சிலர் அதை அப்படியே நாடகமாக்கி நடிக்கலாம் என்றார்கள்; அடிக்கடி கூடிப் பேசினார்கள்; பகுதிகளைப் படித்துப் படித்துப் பார்த்தார்கள். காட்சிகளைப் பிரித்தார்கள்; பாடல்களை இயற்றச் சொன்னார்கள்; முப்பது பாடல்களை இயற்றிக் கொடுத்தேன். ஏதோ பெரிய புரட்சி நிகழப் போவது போல் ஆர்ப்பாட்டம், அமளி! நாளடைவில் நண்பர்கள் பிரிந்தார்கள்; முயற்சிகள் மறைந்தன. ஒன்றுமே இல்லை.



கையெழுத்துப் பிரதியுடன் சென்னையை அடைந்தேன். பதிப்பகத்தார் ஒருவர் முப்பது ரூபாய்க்கு அதைக் கேட்டார். முப்பது கோடி அதன் விலை என்பது என் எண்ணம். சிலநாட்கள் தங்கிச் சென்னையைச் சுற்றிப் பார்த்து விட்டு ஊர் திரும்பினேன்.

இவ்வளவில் கதை எழுதும் ஆர்வம் என் உள்ளத்தினின்றும் அழியவில்லை. மாறாக, முன்னிலும் அதிக உரமே பெற்றது. ஊர்ப் பெரியவர்களில் சிலர், 'உருப்படாதவன்' என்று என்னைத் திட்டினார்கள். ஆனால் என் தாயார் மட்டும் தொடர்ந்து என்னை ஆதரித்தார்கள். எழுதுகிறவைகளை அவ்வப்போது வாசிக்கச் சொல்லிக் கேட்டு, அங்கங்கே தம் மனத்தில் தோன்றிய திருத்தங்களைச் சொல்வார்கள். பாராட்டுகிற இடங்களில் பாராட்டி உற்சாகமூட்டுவார்கள். ''இந்தத் துறை உன்னை வாழ வைக்கும்'' என்றார்கள். நான் தெம்புடன் முயன்று வந்தேன். இது 1936-ல்.

முதல் முயற்சியில் உருவான முழு நாவல் மூலையிலே உறங்கினாலும் என் முயற்சியில் அயர்ச்சி இல்லை. தொடர்ந்து ஏதாவது எழுதிக் கொண்டேயிருந்தேன். முதல் சிறுகதை 1938-ல் ஹனுமானிலும், இரண்டாம் சிறுகதை 1939-ல் காவேரியிலும் பிரசுரமாயின.

1946-ல் மேதை கா. சி. வேங்கடரமணி அவர்கள் பாரதமணியின் பணியை முன்னிட்டு என்னை மாயூரத்திலிருந்து சென்னைக்கு அழைத்து வந்தார்கள். கு. ப. ரா., வசந்தன், 'ஸோமாஸ்' முதலியோரின் அரிய சேவையில் வளர்ந்த சிறந்த பத்திரிகை அது.

நிலையாகச் சென்னையில் தங்கி, பத்திரிகை உலகம், புத்தக உலகம், எழுத்தாளர் உலகம் இவற்றோடு நெருக்கமான தொடர்பு கொண்ட போதுதான், எழுத்து என்றால் என்ன; அதை எப்படி ஆள வேண்டும் என்பன போன்ற பல உண்மைகள் புலனாயின. மனத்தில் கற்பனை தேங்கி நின்றதால் வகை புரிந்ததும் மளமள வென்று எழுதலானேன். சிறுகதைகளும், குறுநாவல்களும் தொடர்ந்து வந்தன. வாசகர்கள் என் கதைகளை விரும்பிப் படித்தார்கள். அந்த வரிசையிலே, 1936-ல் உருவான என் முதல் முயற்சியும் 1950-ல் புத்தக வடிவம் பெற்றது. துப்பறியும் நாவல்களை நிரம்பப் படித்து அவற்றிலிருந்து சரக்குகளை மனத்தில் கொள்முதல் செய்து கொண்டதன் விளைவாகப் பிறந்த அதுவும் ஒரு துப்பறியும் நாவல்தான். பெயர் லோசனா.

குழந்தைகளின் சில செயல்களைப் பார்த்துப் பெரியவர்கள் நகைக்கிறார்கள். தங்கள் பிள்ளைப் பிராயத்து நிகழ்ச்சிகளில் சிலவற்றை எண்ணிப் பார்க்கிறபோது நாணுகிறார்கள். வளர்ச்சி பெற்ற எழுத்தாளன் தனது கன்னி முயற்சிகளை எண்ணுகிற போது பெரும்பாலும் அதே நிலையைத்தான் பெறுவான். என் நிலையும் அதுவேதான்.

பல சிறுகதைகளும் பல குறுநாவல்களும் வெளியான பிறகு என் உள்ளத்தில் குறை உணர்ச்சி முளை விட்டது. 'எண்ணிக்கையின் வளர்ச்சியில் ஒன்றுமே இல்லை; அகல உழுவதிலும் ஆழ உழுவது தான் நலம்; நல்ல நாவலை உருவாக்காத நாம் என்ன எழுத்தாளன்!' என்ற ஏக்கம், குறை உணர்ச்சியை வளர்க்கத் தொடங்கியது. எந்நேரமும் அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

சிந்தனை வீண் போகவில்லை. சரியான நிலைக் களன்கள், உரிய பாத்திரங்கள், எழுத வேண்டிய முறை, உலக அனுபவங்கள் எல்லாம் சிறுகச் சிறுக மனத்தில் சேர்ந்தன. எழுதத் தொடங்கினேன். தெளிவான, சுவையான நடையும் அமைந்தது. இந்நிலையிலே பாரத மணி நின்றது. நான் வறுமையின் முன் நின்றேன். எனினும் முயற்சியை நிறுத்தவில்லை. வறுமையின் தொடக்க நிலை என்னை அடியோடு ஒழித்துப் போட்டு விடவில்லை. முயற்சி முழுமை பெற்றது.

'ஐந்து பெண்களைப் பெற்றால் அரசனும் ஆண்டியாவான்' என்பது வசனம். இரண்டே பெண்களை ஈன்ற கிராமத்து மிராகதார் ஒருவர் பொல்லாதவர்களின் சூழ்ச்சிகளால் நிலை கெட்டுத் தடுமாறியதை நேரில் கண்டிருந்தேன். நற்பண்புகளில் நிறைந்த அக்குடும்பத்தை வைத்து, சுய அனுபவங்கள் சிலவற்றையும் இணைத்து நாவலாக்கினேன். அது சுதேசமித்திரனில் தொடராக வந்தது. 'கதை நெஞ்சத்தைத் தொடுகிறது; ஆயினும் சோக ரசம் மிகுதி' என்றனர். அதன் பெயர் இரு சகோதரிகள்.

'இன்னும் சிறப்பு,' 'இன்னும் சிறப்பு' என்று மனம் அவாவிக் கொண்டிருந்ததே தவிர, நினைத்ததை நினைத்தபடி பொறுமையோடு செய்ய முடியாத சூழ்நிலையில் நான் நன்றாகச் சிக்கிக் கொண்டேன். அன்றாட வாழ்க்கைக்கே திண்டாட வேண்டிய நிலையில் நின்று நிதானித்து எதையும் செய்ய முடியவில்லை. 'எழுத்து விலையானால்தான் உலை' என்கிற நிலையில் 'மூடா'வது, எழுதுவதற்குரிய சூழ்நிலையாவது! சிறுகச் சிறுக உருவாகி வரும் கடன் தொல்லைதான் சூழ்நிலை. நல்ல படைப்புகளுக்கு எங்கே

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




**ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.**

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரீட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் விசேஷ, நுரையும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் புதிய நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

DCG. 72 QT-TAM.

இடம்? ...இன்ன தேதியில் இன்ன பத்திரிகையில் கதை வரப் போகிறது; அதற்கு இன்ன தேதிக்குள் இவ்வளவு ரூபாய் அன்பளிப்பு வரும்; அதைக் கொண்டு வந்து தருகிறேன்; கடன் கொடுத்து உதவுங்கள்' என்று கையேந்திக் கடன் பெற நண்பர்களைத் தேடிச் செல்லவும்; கடன் பெற்று உப்பு, புளி, அரிசி வாங்கிப் போடவும், நோயுற்ற குழந்தைகளை மருத்துவரிடம் கூட்டிச் செல்லவும், இரவெல்லாம் கண்விழித்து விடிவதற்குள் கதைகளை உருவாக்கவும்தான் நேரம் சரியாக இருந்ததே தவிர 'நல்ல படைப்பு' என்று எண்ணிப் பார்க்கக்கூட நேரம் இல்லை. சேலத்திலிருந்து அகதிகள் புறப்பட்டார்கள்; சென்னையிலிருந்து நான் புறப்படவில்லை.




''...பத்து ஆண்டுகளுக்கு முன்பு வரையிலும் இலக்கியப் பணி வயிறு நிறைந்தவர்கள் மட்டுமே செய்யக் கூடிய இலவசப் பணிக்கு ஒப்பாகத்தான் இருந்ததே தவிர, எழுத்தாளனுக்கு வசதி தரும் சக்தி அதற்கில்லை. இன்றுகூட நாட்டில் அறிவுப்பணியாகிய இலக்கியப் பணியை நம்பி யாரும் வாழ முடியாது; வாழ முயலக்கூடாது என்றுதான் சொல்வேன். முன்னேற்றமடைந்த பிற நாடுகளில் உள்ள பாதுகாப்போ, ஆதரவோ இந்த நாட்டில் எழுத்தாளனுக்கு இல்லை -'நாவல் பிறக்கிறது' முதல் கட்டுரையில் நண்பர் அகிலன் உதிர்த்த பொன்மொழிகள் இவை. இலக்கியப் பணியை நம்பி வாழ முயலக்கூடாதுதான். வேறு வழியில்லை எனக்கு: முயன்றேன். படுதோல்வி அடைந்தேன்.

புற நிகழ்ச்சிகள் வேறு; அகநிகழ்ச்சிகள் வேறு. வறுமை கொன்று கொண்டேயிருக்கிற போதும் உள்ளுக்குள் சிந்தனை சிறப்பாக வளர்ந்து கொண்டே தான் இருக்கிறது. வளரும் சிந்தனையை நன்கு வடித்தெடுக்க வாய்ப்பில்லையே என்பதுதானே குறை?

கன்னித் தன்மையிலேயே கைம்மைத் தன்மை பெற்ற இளம் பெண் ஒருத்தி. அழகும் இசையும் அவளிடம் குடிகொண்டிருந்தன. அவள் தந்தையை அணுகி அவளுக்கு மறுமணம் நிகழ்த்தும்படி அந்தரங்க ஆலோசனை சொன்னேன். அவர் என்னை எள்ளி நகையாடினார். அநுதாபத்தோடு பார்த்தார். 'இன்னும் சில நாட்களுக்குள்ளே உனக்குப் பைத்தியம் முற்றிவிடும்' என்றார்.

கோயில் விழா. கூட்டம். பட்டணத்திலிருந்து படித்த, நவயுக வாலிபன் ஒருவன் வந்திருந்தான். இளங் கைம்பெண்ணின் சுடர்விழிகள் அவனைப் பார்த்த பார்வை!

பழைய நிகழ்ச்சி உள்ளத்தில் கிளர்ந்தெழுந்தது. மாசுபடாத பெண் மலராகவே அவளை வைத்து அவள் உள்ளக் கிளர்ச்சிகளைச் சித்திரித்து, அவள் மீது உயிரை வைத்திருக்கும் இன்னொரு பெண்ணின் காதலனை அவள் திருத்தும் நிகழ்ச்சிகளை உருவாக்கினேன். தினகரனில் வந்த அந்த நாவலின் பெயர் 'அன்பே அமுதம்.'

நல்ல வீட்டில் குடிபுக மனிதன் ஆசைப்படுகிறான்; முயல்கிறான். எளிதில் அது நடைபெறுகிறதா? நல்ல நாவல் பிறப்பதும் அப்படித்தான். அதற்குத் தடைகள் பல; முதன்மையானது ஒன்று — வறுமை! ''....எழுத்துக்கு வறுமை நண்பனாயிருக்கலாம்; ஆனால் வாழ்வுக்கு அது பகைவனாகவல்லவா இருக்கிறது?'' இவை நண்பர் விந்தன் சிந்திய நல்முத்துக்கள்!

அந்தப் பகைவனை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விநாடியும் எதிர்த்தபடி, உடனுக்குடன் நிறைவேற்றியேதீரவேண்டிய கடமைகள் முன்னிற்க, சிந்தித்தேன், எழுதினேன், எழுத முயன்றேன்.

செல்வத்தில் திளைத்து, கல்வியில் தேர்ந்து, பட்டம் பெற்ற இளமங்கையொருத்தி காதலித்த வாலிபனையே மணந்து அவனை ஆட்டிப் படைக்கும் அவல நிலையைப் பட்டணத்தில் ஒரு குடும்பத்தில் கண்டேன். 'பனித்துளி' பிறந்து குமுத இதழ்களில் மின்னிற்று.

அன்று கிடைத்தது அன்று போதவில்லை; இன்று கிடைப்பது இன்று போதவில்லை. உடல் வளத்தையும், உடை நலத்தையும், சிரித்த முகத்தையும் பார்த்துவிட்டு நான் இன்று நல்ல நிலையில் இருப்பதாகப் பலரும் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். உண்மை அது அல்ல. கிடைத்திருக்கிற இந்த அரிய வாய்ப்பில் உண்மையைச் சொல்லி விடுகிறேன்-நான் வளமான வாழ்வில் இல்லை!

இறுதி நாள் வரை எழுதுகோலைக் கையில் தாங்கி, அவதானம் செய்து, வாழ்க்கையோடு போராட வேண்டும் என்பது எனக்கு இடப்பெற்ற கட்டளையானால் யார் என்ன செய்ய இயலும்?

இந்த உண்மையை இங்கே வெளியிட நான் கூசவில்லை. அகிலன் கௌரவமாக நாசுக்காகச் சொன்னார்; விந்தன் அப்பட்டமாக, இதயக் குமுறலோடு வெளியிட்டார்; நான் சற்று விரிவாகக் கூறி

யிருக்கிறேன். அனைவரும் அறிய வேண்டிய உண்மைதானே?

''இலக்கிய அநுபவங்கள் என்றால் வாழ்க்கை அநுபவங்கள்தான். வாழ்க்கையில் இல்லாதவற்றையோ, ஒட்டாதவற்றையோ படைத்துக் காட்ட முயல்வது அல்ல நாவல். வாழ்க்கைப் புதிர்களை விடுவிக்க வருகிறது அது'' என்கிறார் நண்பர் ஆர்வி. இதை முழு மனத்தோடு நான் ஆதரிக்கிறேன்; அனைவருமே ஆமோதிப்பார்கள்.

என் மனைவியின் தங்கை விஜயம். சில காலம் அவள் எங்களிடம் வளர்ந்தாள். எங்களை வளர்ப்புப் பெற்றோர்களாகப் பாவித்தாள். வயதை மீறிய -தெய்விக- அறிவுடைய பெண். அவளுடைய அருள் நோக்கிலும், சிறு நகையிலும், மழலை மொழியிலும், தீர்க்கதரிசனப் பேச்சிலும் விதரணை மிக்க செயலிலும் நான் மட்டுமல்ல; அவள் தந்தை மட்டுமல்ல; மற்றும் அநேகம் பெரியவர்களுங்கூடக் கட்டுண்டிருந்தோம். தன் வருங்காலப் பொறுப்பை நாங்களே ஏற்க வேண்டும் என்றாள். அதன்படியே திருப்திகரமான வரனைத் தேடினோம்; எங்கள் பொருளையும் ஓரளவு செலவிட்டு, நாங்களே கன்னிகாதானம் செய்து கொடுத்து மணமுடித்தோம். பிறந்த குலம், அதனைச் சார்ந்த குடும்பங்கள் ஆகியவற்றிலே தன் அறிவாற்றலால் பல நன்மைகளை விளைத்த அவள் புகுந்த குலத்திலும் ஆட்சியை மேற்கொண்டு நலம் பல சேர்க்கத் தொடங்கினாள். கணவர் வீட்டிலே அவள் வாழ்ந்த காலம் ஐந்து மாதம் நான்கு நாட்களே. 'மெனிஞ்சிடிஸ்' என்ற விசித்திர நோய் அவளைப் புட்பகம் ஏற்றிப் பொன்னாட்டுக்கு அனுப்பி விட்டது!

குழந்தையாய் வந்து, தெய்வமாய் அமைந்துவிட்ட அந்த வனிதையின் திருவுருவப் படத்தை இன்றும் நான் மனைவி மக்களோடு வழிபட்டு வருகிறேன். அவள் நாமம் வாழ நான் செய்யக் கூடியது என்ன? இலக்கியத்தில் அவள் கல்யாண குணங்களை வடித்தெடுக்க எண்ணினேன்; முயன்றேன்.

'அப்பட்டமான உண்மை இனிக்காது; வெறும் அழகு ரசிக்காது; அலங்காரமும் கூட வேண்டும்' என்று பெருகி வந்துவிட்ட மனோபாவத்திற்கேற்பக் கற்பனைகளை வேண்டிய அளவு சேர்த்தேன். அதில் மேலும் மெருகிட்டார் எனது குருநாதர் திரு கி. வா. ஜ. அவர்கள். 'இலக்கியத்திலாவது அவளை வாழ வையுங்கள்' என்றார். அவ்வாறே செய்தேன்.. வெற்றிலைச் சுருள் விரியத் தொடங்கிற்று.

செப்டம்பர் 9 முதல்

சாந்தி
(ஏர்கண்டிஷன்)
ஸ்ரீகிருஷ்ணா
உமா





சிவாஜி கணேசன் அளிக்கும்
சரவணா பிலிம்ஸின்

# பாலும்



# பழமும்



தயாரிப்பு: G.N.வேலுமணி




டைரக்ஷன்: A.பீம்சிங்

ELEGANT



# மழை
# அல்லது வெய்யில்
# எப்பொழுதும் உங்கள்
# ஆடைகளுக்கு டினோபால் அவசியம்!

<u>எல்லோரும்</u> டினோபாலை உபயோகிக்கிறார்கள்.

மழைக்காலத்தில் துணிகளை சலவை செய்வது மிகவும் சிரமம். ஆனால் மழை அல்லது வெயிலில், எச்சமயத்திலும் டினோபாலினால் மட்டும்தான் உங்கள் ஆடைகளை பளிச்சென்று தூய வெண்மையாகச் செய்ய முடியும்! காட்டன் மற்றும் ரேயான் வெள்ளைத் துணிகளை துவைத்தால் மட்டும் போதாது. அவைகளை துவைத்த பிறகு டினோபாலில் நனையுங்கள். டினோபால் மிகவும் சிக்கனமானது - குடும்பத்திலுள்ள எல்லா துணிகளுக்கும் ஒரு சிறிதளவு டினோபால் போதுமானது. இன்றே டினோபால் வாங்குங்கள்.







டினோபால் என்ற வார்த்தை ஜே. ஆர். கெய்கி எஸ். ஏ., பாஸ்ல், ஸ்விட்ஸர்லாந்து என்பவர்களுடைய ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும்.

வெள்ளைத் துணிகளை மிக வெண்மையாக்க ஒரு சிறிதளவு **டினோபால்** போதுமானது.

தயாரிப்பாளர்கள்:
சுஹ்ரித் கெய்கி லிமிடெட், வடி வாடி, பரோடா.

பூர்ண விநியோகஸ்தர்கள்:
சுஹ்ரித் கெய்கி ட்ரேடிங் லி., த. பெ. 965, பம்பாய்-1.

SISTA'S-SG. 139 A

TAM

# சிரிக்காதே!



**எஜமான் :** இருந்தாலும் ஆயாவின் வேலைக்கு உன்னுடைய உயரம் மிகக் குறைவுதான்!

**ஆயா :** உங்களுக்கு இதனால் லாபமும் உண்டு. எப்போதாவது குழந்தை என் கையிலிருந்து விழுந்து விட்டால் அது காயம்படாமல் தப்பலாமில்லே?

●



"என் பெண் பிடில் வாசிக்கிறாள், மனைவி வீணை வாசிக்கிறாள், பையன் மிருதங்கம் வாசிக்கிறான்!"

"நீங்கள்?"

"இதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் பேப்பர் வாசிக்கிறேன்!"

●

**தபாலாபீசில் ஒருவர் :** என்ன ஐயா! உமக்கு மூளை கீளை இருக்கிறதா?

**கவுண்டருக்குப் பின்னிருப்பவர் :** அங்கே 'என்கொயரீஸ்' கவுண்டரில் கேளுங்கள்.

●

**டாக்டர் :** என்ன ஐயா! ஆறுமாசமா தூக்கமே வரலேன்னு பெரிய வியாதியாச்சே! உடனே இங்கே வரவேண்டாம்? இத்தனை நாள் தூங்கிக்கிட்டா இருந்தீங்க?

●

' எங்கப்பா கிளியை வளர்த்துப் பூனை கையிலே கொடுக்கிற மாதிரி பண்ணிட்டார்!"

"சந்தேகமேயில்லே. நீ கிளியாயில்லாட்டா இந்தமாதிரி இதையே திருப்பித் திருப்பிச் சொல்லிண்டிருப்பாயா?"

●

"என்னய்யா குட்டிபோட்ட பூனைமாதிரி ஏன் அலைகிறீர்கள்!"

"எனக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்திருக்கு சார்!"

●

"இனி உன் கூடவே எப்பொழுதும் இருப்பேன். உன்னை விட்டு ஒரு கணமும் பிரிந்திருக்க மாட்டேன்."

"ஏன் உங்கள் ஆபீசில் உங்களை வேலையை விட்டு நீக்கி விட்டார்களா?"

●

"நான் எழுதிய 'சமையல் செய்வது எப்படி?' என்கிற புத்தகம் பயன்பட்டதா உங்களுக்கு?"

"ஓ! தினமும் அதிலிருந்துதான் ஒரு ஏட்டைக் கொளுத்தி அடுப்பைப் பற்ற வைக்கிறேன்!"

# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

### 21

கல்விக்குள் பெரிய கல்வி கடவுளைப் பற்றிய கல்வியே ஆகும். அதுவே அருட்கல்வி என்பது. இந்தக் கல்வியை உடம்பில் ஆற்றல் இருக்கும்போதே கற்றுத் தேறுங்கள் என்கிறார் திருமூலர்.

**நிற்கின்ற போதே
நிலையுடை யான்கழல்
கற்கின்ற செய்மின்**

[நிற்கின்ற போதே—உடம்பில் உயிர் நிற்கிற காலத்திலேயே. நிலையுடையான் – அழிவற்றவனை இறைவன். நிலையுடையான் கழல்—நிலையுடையவனின் திருப்பாதங்களை. கற்கின்ற செய்மின்—அறிந்துகொள்ளும் முறைகளைப் பயிற்சி செய்யுங்கள். கற்கின்ற—கற்றுக் கொள்ளுகிற முறைகளை.]

இந்த மானிட உடம்பில் உயிர் நிற்கும் போதே, தெய்வத் திருப்பாதங்களை உணர்த்துகிற கல்வியைப் பயிலுங்கள். அப்படிச் செய்தால்,

**கழிந்தறும் பாவங்கள்.**

[பாவங்கள் கழிந்தறும்—பாவங்கள் தொலைந்து மிச்சமின்றி நீங்கிவிடும்.]

**சொற்குன்றல் இன்றித்
தொழுமின்**

[சொற்குன்றல் இன்றி – சொற்சோர்வு இல்லாமல். தொழுமின்—போற்றித் துதியுங்கள்.]

இவ்வளவு போதும் என்று வரையறை வைத்துக் கொள்ளாமல், தாராளமாக அவனைப் போற்றுங்கள் என்கிறார். அதாவது எத்தனை போற்றினாலும் போதாது என்கிறார். அப்படித் தொழுதால்,

**தொழுதபின்
மற்றொன்று இலாத
மணிவிளக்கு ஆமே**

[மற்றொன்றிலாத—ஒப்பற்ற. இந்த விளக்குக்கு ஒப்பாக மற்றொரு விளக்கைச் சொல்ல இயலாத. மணிவிளக்கு ஆமே—சுயம்பிரகாசமான ரத்தின ஜோதியாகும். 'ஆமே' என்பதற்குத் தோன்றுமே என்று பொருள். அதாவது, மூடிக் கிடந்த ஞானம் பிரகாசிக்கும்.]

ஞானம் என்பது அகக்கண்ணில் நிற்கும் இறைவனுடைய பிரகாசமேயாகும். இறைவன் அருள் கிட்டுமேயானால் அகக்கண் ஒப்பற்ற தீபமாகச் சுடர்ந்து எரியும். இந்த விளக்கு அணையா விளக்கு.

**நிற்கின்ற போதே
நிலையுடை யான்கழல்
கற்கின்ற செய்மின் ;
கழிந்தறும் பாவங்கள் ;
சொற்குன்றல் இன்றித்
தொழுமின் ; தொழுதபின்
மற்றொன் றிலாத
மணிவிளக் காமே !**

ஞானிகளின் உள்ளத்தில், இறைவன் கோயில் கொண்டிருக்கிறான். அவன் அருளைப் பெற்றவுடன் ஞானம் பிரகாசமாகும். ஞானம் என்பது அவன் அருளின் பரிணாமமே.

**கடல்உடை யான் ;மலை
யான் :**

[கடல்—கடலையடுத்த திவ்விய ஸ்தலங்கள். மலை—மலைத்திருப்பதிகள். உடையான் -அந்த ஸ்தலங்களெல்லாம் அங்கே நின்று காட்சிதரும் தெய்வத்துக்கு உடைமையாகும். அதனால் 'உடையான்' என்றார்.]

இறைவன் அர்ச்சாவதாரமாகப் பல வடிவங்களிலே பல தலங்களில் எழுந்தருளியிருக்கிறான். கடலும் மலையும் தலங்களாகக் கொண்டு வீற்றிருக்கிறான்.

கடல்உடை யான்.மலை
யான்.ஐந்து பூதத்து
உடல்உடை யான்:

நிலம், தீ, தண்ணீர், காற்று, வானம் ஆகிய ஐம்பூதங்களையும் உடலாகக் கொண்டு உறைகிறான். இப்படிப்பட்ட ஈசன் பல ஊழிக் காலமாக இடபத்தை வாகனமாகக் கொண்டு சிவபெருமானாகப் பக்தர்களுக்குக் காட்சி தந்திருக்கிறான்.

கடலுடை யான்மலை
யான்ஐந்து பூதத்து
உடலுடை யான்பல
ஊழிதோ றூழி
அடல்விடை ஏறும்
அமரர்கள் நாதன்

[பல ஊழிதோறூழி—பல ஊழி ஊழிக்காலமாக, அடல் விடை—வலிமை பொருந்திய காளையாகிய இடப வாகனத்தில். ஏறும்—ஏறி வீற்றிருக்கும். அமரர்கள் நாதன்—தேவ தேவன், மகாதேவன்.]

பல ஊழிக் காலமாக இடப வாகனத்தில் ஏறிவரும் சிவபெருமானே அவன். அந்தத் தேவ தேவன்,

இடம்உடை யார்நெஞ்சத்
தில்இருந் தானே

கடலிலும், மலையிலும், ஐம்பூதங்களிலும், இடப வாகனத்திலும் இருக்கிற இறைவன், சிறிய இடமாகிய மனித நெஞ்சத்திலும் இருக்கிறான். எந்த மனிதர்களுடைய நெஞ்சத்தில்?

இடம்உடை யார்நெஞ்சத்
தில்இருந் தானே

[இடம் உடையார்—ஈசனுக்கு உள்ளத்தில் இடம் தருகிறவர்கள்.]

அவன் வந்து உட்காருவதற்கு எவருடைய நெஞ்சில் இடம் இருக்கிறதோ அங்கே அவன் வந்து அமர்ந்து கொண்டான், சந்தேகமில்லை என்று ஆனந்தக் களிப்பில் துள்ளிப்பாடுகிறார் முனிவர்!

கடலிலும், மலையிலும், பஞ்சபூதங்களிலும், இடப வாகனத்திலும் அவனுக்கு வசதியான இடம் இருக்கிறது: அப்படிப்பட்ட இறைவன் மனித நெஞ்சத்தில் இடம் தேடுகிறான். எந்த நெஞ்சிலாவது இடம் இருந்தால் உடனே அங்கு வந்து இருந்து கொள்கிறான்! நாம் தடை செய்யாமல் இருப்பதே, அவனுக்கு நாம் செய்ய வேண்டியது! இது அவன் அருட் தன்மை என்கிறார் திருமூலர்.

கடலுடை யான்மலை
யானைந்து பூதத்
துடலுடை யான்பல
ஊழிதோ றூழி
அடல்விடை யேறும்
அமரர்கள் நாதன்
இடமுடை யார்நெஞ்சத்
தில்லிருந் தானே!

"வெள்ளத்தின் உள்ளானும்
வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான்"

எனவும்,

"உள்ளுவார் உள்ளத்து
உளன்கண்டாய்"

எனவும் வைஷ்ணவ முதலாழ்வார்கள் பாடியதும் இதுவே!

# புதுவெள்ளம்

### அத்தியாயம் ஒன்பது

## உணர்ச்சிப் பெருக்கம்

சித்திராவும் முருகையனும் சந்தித்துப் பேசிக் கொண்ட நேரம் பத்து நிமிடங்களுக்கு மேலிருக்காது. அந்தச் சிறு பொழுதுக்குள் அவர்களுடைய நெருங்கிய உறவைக் குருசாமி எப்படியோ கண்டுபிடித்து விட்டான். கலைஞனின் கண்களுக்கு இயல்பாகவே உள்ள கூர்மை அவர்களை நொடிப் பொழுதில் எடை போட்டு விட்டது. அதனால்தான், ''எப்போது உங்கள் இருவருக்கும் கல்யாணம்?'' என்று ஒரு துணிகரமான கேள்வியை முருகையனிடம் கேட்டு வைத்தான்.

''என்னைப் பொறுத்தவரையில் கல்யாணம் செய்து கொள்ளும் காலம் எனக்கு வருமோ வராதோ தெரியாது. அப்படி ஒரு காலம் வந்தால், மத்தியில் ஒன்றும் தடை ஏற்படாமல் இருந்தால், நான் இந்தப் பெண்ணையே கல்யாணம் செய்து கொண்டாலும் செய்து கொள்வேன்....''

''ஓ! புரிந்து கொண்டேன்'' என்று சிரித்தான் குருசாமி. ''நாட்டுக்குச் சுதந்திரம் வரும் வரையில் கல்யாணம் செய்து கொள்வதில்லை என்று சில பேர் முடிவு செய்திருக்கிறார்களே, நீங்களும் அவர்களில் ஒருவரா?''

''ஆமாம், அந்த முடிவில்தான் நான் இருக்கிறேன்.''

''நல்ல முடிவுதான். ஆனால் உங்கள் லட்சியமும் பிடிவாதமும் என் அண்ணியிடம் பலிக்காது போலிருக்கிறதே! நான் சொல்கிறேனென்று தப்பாக நினைக்காதீர்கள். உங்கள் முகம் அவர்களைப் பார்த்து விட்டு வந்த பிறகு எவ்வளவு பிரகாசமாயிருக்கு, தெரியுமா?''

முருகையன் வெட்கித் தலை குனிந்தான். தன் முகத்துக்கே புதிய ஒளி தரக் கூடிய அளவுக்குச் சித்திராவிடம் என்ன சக்தி இருந்தது என்று அவனுக்குத் தெரியவில்லை. ஆனால், அவளைச் சந்தித்து விட்டு வந்ததிலிருந்து இனம் புரியாத ஓர் ஆனந்த ஊற்று அவன் மனத்துக்குள்ளே பொங்கிக் கொண்டிருந்தது மட்டிலும் உண்மைதான்.

சற்று நேரத்துக்கெல்லாம் குருசாமிக்கு மீண்டும் உறக்கம் வந்து விட்டது. முருகையனுக்கோ விழுப்புரத்தில் அறுந்து தொங்கிய பழைய நினைவுகள் மறுபடியும் ஒன்று கூடின. அந்த நினைவுகளின் பாதையில் சித்திராவுடன் பழகிய காட்சிகளும் கலந்திருந்ததால், அவன் தன்னையே அதில் மிதக்க விட்டுவிட்டான்.

மூன்று ஆண்டுகளுக்கு முன்பு திருச்சியில் கோட்டை ஸ்டேஷனிலிருந்து அவனுடைய கல்லூரித் தலைவர் அவனை அவசரமாக வழியனுப்பி வைத்தாரல்லவா? அந்தப் பிரயாணம் மறுநாள்பொழுது புலரும் வேளையில் குளித்தலையை அடுத்திருந்த சிற்றூரின் ரயிலடியில் முடிந்தது. ரயிலடியிலிருந்து இரண்டு மைல்களுக்கு மேல் நடந்து சென்று அவனுடைய கிராமத்தை அடைய வேண்டும். முருகையன் சோர்வோடும் ஏமாற்றத்தோடும் கிராமத்துச் சாலை வழியில் நடந்தான். இருபுறங்களிலும் வாழைத் தோட்டங்களும் நெல் வயல்களும் தென்பட்டன. சாலையோரங்களில் நீண்டு வளர்ந்த தென்னைகள் காலைக் காற்றில் பாளை முத்துக்களை மெல்லச் சிதறிக் கொண்டிருந்தன.

பாதிவழி வந்தவுடன் குறுக்குப் பாதையிலிருந்து மாட்டு வண்டியொன்று வந்து முருகையன் நடக்கும் திசையில் திரும்பியது. வண்டி ஒற்றை மாட்டு வண்டி. அதற்குள்ளே இருந்தவன் முருகையனைத் திரும்பிப் பார்த்து விட்டு வண்டியை நிறுத்தினான்.

''யாரது, மாடி வீட்டுத் தம்பியா?'' என்று குரல் கொடுத்தான்.

முருகையனை அந்த ஊர்க்காரர்கள் மாடிவீட்டுத் தம்பி என்றுதான் கூப்பிடுவது வழக்கம். பெரியபாளையம் கிராமத்தில் முதன் முதலாக மாடி வீடு கட்டியவர் முருகையனின் தகப்பனாரைப் பெற்ற பாட்டனார். அதிலிருந்தே அவர்களுக்கு மாடி வீட்டுப் பட்டம் வந்து விட்டது. இன்னும் அவர்கள் வீட்டைத் தவிர அங்கே மற்றொரு மாடி வீடு எழும்பி விடவில்லை.

முருகையன் வண்டிக்குள்ளிருந்தவனை உற்றுப் பார்த்தான். மேலைத் தெரு பெருமாள்சாமி அவன். குட்டை கட்டையாகத் திரண்டு உருண்ட தோள்களோடு, மேலே சட்டை கூடப் போடாமல் தோற்றமளித்தான் அவன். முருகையனுடைய பழைய நண்பன் அவன்.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பை அவன் முருகையனோடு திருச்சியில் முடித்தவன். மேலே படிக்காமல் கிராமத்துக்கே திரும்பி வந்து விட்டான்.

பெருமான்சாமி முருகையனைத் தன் வண்டியில் ஏற்றிக் கொண்டு, மாட்டை அதன் கால் போன போக்கில் மெதுவாக நடை பழக விட்டு விட்டான்.

"ஊரில் உன்னுடைய வாசகசாலை எப்படி நடக்கிறது?" என்று கேட்டான் முருகையன்.

"நன்றாக நடக்கிறது. படிக்கத் தெரிந்தவர்களில் பலர் வந்து படிக்கிறார்கள். படிக்கத் தெரியாதவர்களுக்குச் சிலர் படித்துக் காட்டுகிறார்கள். கீழ்த்தரமான செய்திகளை வெளியிடும் பத்திரிகைகளையும் நடிக நடிகையரை வைத்துப் பிழைப்பு நடத்தும் பத்திரிகைகளையும் அங்கே நுழைய விடுவதில்லை."

"வேறு என்னென்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான் முருகையன்.

"வயல் வரப்பில் வேலை செய்பவர்களுக்குச் சில காலங்களில் தவிர மற்ற நாட்களில் வேலை இருப்பதில்லை. அவர்களுக்கு ராட்டினங்கள் வாங்கிக் கொடுத்து நூற்கச் செய்கிறேன். முன்னால் அரை வயிற்றுக் கஞ்சி குடித்தவர்களுக்கு இப்போது ராட்டினம் முக்கால் வயிற்றுக் கஞ்சி ஊற்றுகிறது. இந்நிலையில் இவ்வளவுதான் என்றால் முடிந்தது.—அது சரி, நீ ஏன் இப்படித் திடீரென்று புறப்பட்டு வந்திருக்கிறாய்? விடுமுறைகூட இன்னும் வரவில்லையே?"

முருகையனுக்கு உண்மையை வெளியிடுவதற்குச் சிறிது தயக்கமாக இருந்தது. ஒரு விநாடி யோசனை செய்தான். கேட்டவன் அவனுடன் நெருங்கிப் பழகிய நண்பனாதலால் எல்லா விவரங்களையும் கூறி முடித்தான். "என்னுடைய படிப்பு இதோடு முடிந்து விட்டது. இனி எந்தக் கல்லூரியிலும் என்னைச் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள். இதுகூட எனக்குக் கவலை இல்லை; என்னைச் செயலற்றவனாக்கி வெளியே அனுப்பி விட்டார்களே என்றுதான் வருந்துகிறேன்."

பெருமான்சாமியின் முகத்தில் புதுக் களை தோன்றியது. "முருகையா! நீ நல்ல சமயத்தில் இங்கே வந்து சேர்ந்திருக்கிறாய். உனக்கு நம்முடைய கிரா



மத்திலேயே நிறைய வேலை இருக்கிறது. நாம் அதைச் சேர்ந்து செய்வோம்'' என்று உற்சாகத்துடன் கூறினன்.

''நீ என்ன சொல்கிறய் பெருமாள் சாமி...?'' என்ருன் முருகையன்.

பெருமாள்சாமி முருகையனின் முகத்தை ஒருகணம் ஊடுருவிப் பார்த்து விட்டு, மெதுவான குரலில் மளமள வென்று பல செய்திகளைக் கூறினன். ஓரிரண்டு நாட்களில் அவன் நடத்த விருந்த பயங்கரச் சதித் திட்டங்களை ஒளிவு மறைவின்றி வெளி யிட்டான். முருகையனுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. அவன் கூறிய செய்திகளைக் கேட்டுப் பேரதிர்ச்சி யுற்ருன். காந்தி யடிகளின் கொள்கைகளில் அதுவரையில் நம்பிக்கை வைத்திருந்த இளைஞன்தானு பெருமாள்சாமி?

''பெருமாள்சாமி! நீ நடத்தத் திட்ட மிட்டிருப்பது மறப்போர்; வன்முறைப் போராட்டம். இதனுலெல்லாம் நம் நாடு விடுதலையடைந்து விடுமென்று நான் நினைக்கவில்லை. வெறிச் செயல் களால் அதிகமான வெறிச் செயல்களைக் கிளறிவிட முடியுமே தவிர நமக்கு அத ஞல் வழி பிறந்து விடாது.''

பெருமாள்சாமியின் கண்கள் சிவந் தன. மாட்டு வண்டியின் வைக்கோலுக் குள் மறைத்து வைத்திருந்த சில அச்சுத் தாள்களை எடுத்து முருகையன் கையில் கொடுத்தான். ''உனக்கு ஆங் கிலம் தெரியுமல்லவா? நாட்டில் இப் போது என்ன என்ன நடக்கிறதென்று படித்துப் பார்!''

அது செய்திப் பத்திரிகைகள் கடுமை யான இருட்டடிப்புக்கு இலக்காகி யிருந்த காலம். தணிக்கை முறை மிக வும் பயங்கரமாக இருந்தது. நிருபர்கள் பலர் செய்திகளைத் திரித்து அனுப்பும் படி வற்புறுத்தப்பட்டார்கள். ஆகவே, மறைக்கப்பட்ட செய்திகளின் உண் மைத் தோற்றத்தைக் கண்டவுடன் முரு கையன் வெலவெலத்துப் போனன்.

ரகசியச் செய்திக்காரர்களுடன் பெரு மாள்சாமி தொடர்பு கொண்டிருந்தது அவனுக்கு வியப்பாகவும் விந்தையாக வும் இருந்தது.

செய்திகளைப் பலமுறை படித்தான் முருகையன். வங்காளம், அஸ்ஸாம், ஒரிஸ்ஸா முதலிய பல பகுதிகளிலும் இன்னும் அங்கங்கே பரவலாகப் பல கிராமங்கள்-நகரங்களிலும் குரூரமான ராணுவ ஆட்சி தலைவிரித்தாடிக் கொண் டிருந்தது.*

'சிறை செய்யப்பட்டவர்களும் காவ லில் வைக்கப்பட்டவர்களும் எழுபத்தை யாயிரம் பேர்!'

'ராணுவத்தாலும் போலீஸாலும் சுடப்பட்டு இறந்தவர்கள் தொள்ளா யிரம் பேர்!'

'காயம்பட்டு அங்க ஈனமானவர் களும் உயிருக்குத் துடித்தவர்களும் ஆயி ரத்து ஐந்நூறு பேர்!'

'ஐந்நூறு இடங்களுக்கு மேல் போலீ ஸாரின் துப்பாக்கிப் பிரயோகம். அறு பது இடங்களில் ராணுவத்தாரின் துப் பாக்கிப் பிரயோகம்.'

'இன்னும் எரிக்கப்பட்ட வீடுகள் எத் தனை! காடுகளுக்குள் ஓடி ஒளிந்தவர்கள் எத்தனை எத்தனை பேர்! மானம் பறிக்கப் பட்ட பெண்கள், சித்திரவதை செய்யப் பட்ட ஆண்கள், கூட்டு அபராதம் விதிக் கப்பட்ட கிராமங்கள்...'

'விமானங்களை ஏவி விட்டு, மக்களைப் பீதியுறச் செய்யும் செயல்களும் நடந்து கொண்டிருக்கின்றன.'

முருகையனின் கரம் அந்தப் பத்திரி கையைப் பெருமாள்சாமியிடம் திருப்பிக் கொடுக்கும் போது நடுங்கியது. இவ் வளவு கொடுமைகள் நடந்தும் வெளி யில் எதுவுமே தெரியவில்லை.—அது வெள்ளைக்காரர்களின் கடைசிக் காலத்து ராஜதந்திரம் போலும்!

பெருமாள்சாமி பேசினன்: ''முரு கையா! அன்னியப் படையெடுப்புக்கு ஒரு நாடு உள்ளாகும் போது எவ்வளவு கொடுமைகள் நடைபெறக் கூடுமோ, அவ்வளவும் இப்போது நடந்து கொண் டிருக்கின்றன. தெற்கே தமிழ்நாட்டில் நாம் நன்ருகத் தூங்கிக் கொண்டிருக் கிறேம். நம்முடைய தேவகோட் டைக்கு அடுத்த திருவாடானை என்ற கிராமத்தில் நடந்த பயங்கர அடக்கு முறைகளைப் பற்றிக்கூட நமக்குத் தெரி யாது. கிராமம் சுடுகாடு போல் காட்சி யளிக்கிறதாம். காடுகளுக்குள் ஓடி ஒளிந்த மக்களை வேட்டையாடிக் கொண் டிருக்கிருர்களாம்.''

''இவ்வளவு அக்கிரமங்களை அவர்கள் நடத்துவதற்கு நம்முடைய இளைஞர் களின் கட்டுப்பாடற்ற உணர்ச்சியும் ஒரு வகையில் காரணமாகிறது. பலம் பொருந்திய ராணுவச் சக்தியுடன் போராடுவதற்கு உன்னுடைய வன் முறைச் செயலுக்குச் சக்தி இல்லை பெரு மாள்சாமி! ராணுவத்தைவிட ஆத்ம சக்திக்கு அதிக வலிமையுண்டு. அதை நாம் கைக்கொண்டு நம் கிராமத்திலும் போராட்டம் நடத்துவோம்.''

''நீ ஒரு கோழை!'' என்று கோபத் துடன் கூறினன் பெருமாள்சாமி.

---

* ஆதாரம்: 'Indian revolt' தரிணி சங்கர் சக்கரவர்த்தி.

''பெருமாள்சாமி! நான் சாவதற்கு அஞ்சவில்லை. ஆனால் நம்முடைய கிராமத்தில் பலரை வீணாய்ப் பலி கொடுக்க வேண்டாமென்றுதான் சொல்லுகிறேன். உன்னுடைய வழி தவறானதென்று எனக்குத் தோன்றுகிறது.''

''நான் முடிவு செய்து விட்டேன்'' என்று அழுத்தமாய்க் கூறினான் பெருமாள்சாமி. ''அடிமைகளாகவும் கோழைகளாகவும் வாழ்வதை விட அழிந்து சாவதே மேல். நான் அழிக்கப் போகிறேன்; அழியப் போகிறேன். உனக்கு விருப்பமிருந்தால் என்னோடு சேர்ந்து விடு. இல்லாவிட்டால் வாயை மூடிக் கொண்டு பேசாமல் இரு. எதையும் வெளியிட்டு விடாதே!''

''நானும் உன்னைத் தடுக்கவில்லை; நீயும் என்னைத் தவறாக நினைக்க வேண்டாம்'' என்றான் முருகையன்.

சிறிது நேரம் இருவரும் மௌனமாகவே வந்தார்கள். முருகையனுக்கு இதனால் பெருமாள்சாமியின் மீதிருந்த அன்பு அதிகமாயிற்றே தவிர, குறையவில்லை. நோக்கம் ஒன்றுதான். வழிகள் வெவ்வேறானவை.

ஆனால் ஒரு விஷயம் மட்டிலும் தெளிவாகத் தெரிந்தது. நாட்டின் தென் கோடியிலிருந்து வட கோடி வரையில் அடிமைத் தளையின் எதிர்ப்பு வேகம் பரவி விட்டது. பற்பல உருவங்களில் அது வெளிப்பட்டது. அடக்கு முறைகளால் அதை அழிக்க முடியவில்லை. சின்னஞ்சிறு கிராமமான பெரிய பாளையத்தில் கூடப் புயலின் சின்னம் தோன்றி விட்டதே!-இனி கிராமத்தில் என்ன நடக்கும்? எப்படி நடக்கும்?

ஏதோ விபரீதங்கள் நிகழக் கூடுமென்ற அளவுக்கு முருகையன் நிச்சயப் படுத்திக் கொண்டான். இன்றைய உலகத்தில் திடீர் திடீரென்று ஏதேதோ நடந்து விடுகின்றன. நல்லவர்கள்-பெரியவர்களின் கைகளுக்கு உலகம் அகப்படாத வரையில் தீய நிகழ்ச்சிகளைத் தடுக்கவும் முடியாதுதான்.

கிராமத்தின் எல்லைக்குள் வண்டி நுழைந்தவுடன் முருகையன் வண்டியிலிருந்து இறங்கினான். பெருமாள்சாமியின் கைகளை இறுகப் பற்றிக் கொண்டு தழுதழுத்த குரலில் கூறினான்:-

''நம் கிராமத்து மக்கள் ஏதும் அறியாதவர்கள்; பரம ஏழைகள். அவர்களுடைய எதிர்கால வாழ்க்கையைப் பாதிக்கும் அளவில் அவர்களுக்கு ஏதும் செய்து விடாதே. கூடுமானவரையில் அவர்களுக்குத் தீங்கு நேராமல் பார்த்துக் கொள்.- இப்போது உன் கையில் பலருடைய வாழ்க்கை இருக்கிறது.....''

கைகளை வெடுக்கென உதறிக் கொண்டு மயிலைக் காளையை வேகமாய்த் தட்டி விட்டான் பெருமாள்சாமி. போர்க்களத்துக்குச் செல்லும் வீரனின் குரூரம் அவன் கண்களில் தெரிந்தது. வண்டியின் சக்கரம் உருண்டவுடன் முருகையன் தன்னுடைய வீட்டை நோக்கி நடந்தான்.

## அத்தியாயம் பத்து

# நகரத்து விருந்தாளி

பெரியபாளையம் கிராமத்துக்குள்ளே சிறிய காரைக் காண்பதென்றால் அது அபூர்வமான காட்சிதான். அதிலும் அப்படி கார் தன் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தது முருகையனுக்கே ஆச்சரியமாக இருந்தது. ஒருகணம் வெளியில் நின்று காரைப் பார்த்து விட்டு வேகமாக வீட்டுக்குள் நுழைந்தான்.

வீட்டுக்கூடத்தில் அவன் தகப்பனார் சிவப்பிரகாசத்தைக் காண வில்லை. யாரோ வயது சென்ற ஒரு புது மனிதர் மல் ஜிப்பாவும் வேஷ்டியுமாக நாற்காலியில் கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தார். ஒல்லியாக நரைத்த கிராப்பும் கழுகுக் கண்களுமாகக் காட்சியளித்த அவருடைய பார்வை முருகையனை வரவேற்கக் கூடியதாக இல்லை.

முருகையன் சற்றுத் தயங்கி நின்றான்.

''யாரப்பா நீ? எங்கே வந்தாய்?'' என்று சிடுசிடுப்போடு கேட்டார் அவர். அத்துடன் நிறுத்தாமல், ''திறந்த வீட்டுக்குள் நீ பாட்டுக்கு நுழைந்து வந்தால் என்ன அர்த்தம்? இங்கே உட்கார்ந்திருப்பது மனிதனாய்த் தெரியவில்லை?'' என்று எரிந்து விழுந்தார்.

முருகையன் திடுக்கிட்டான். அவனுடைய வீட்டில் உட்கார்ந்துகொண்டு அவனையே மிரட்டும் அந்தப் பேர்வழியைக் கோபத்தோடு பார்த்தான்.

''கேட்டால் பதில் சொல்லேன்! யார் நீ? ஏன் அப்படி முறைக்கிறாய்?''

அதற்குள் பக்கத்து அறைக்குள்ளிருந்து ஒரு பெண் குரல் கிளம்பியது.

''தாத்தா! இது பட்டணமில்லை. பட்டிக்காட்டு மனிதர்களிடம் நீங்கள் நிதானமாகப் பேச வேண்டும். இந்த வீட்டைச் சத்திரம் என்று நினைத்துக்

கொண்டு யார் யாரோ வருகிறார்கள்; யார் யாரோ போகிறார்கள். -கேட்டால் நம்மிடமே சண்டைக்கு வருவார்கள், தாத்தா!''

குரல் வந்த திசையில் திரும்பிப் பார்த்தான் முருகையன். சுவர் மறைத்துக் கொண்டிருந்ததால் உருவம் நன்றாகத் தெரியவில்லை.

''நீங்கள் யார்?'' என்று அந்தப் பெரியவரிடம் மிகுந்த மரியாதையோடு கேட்டான்.

''என்ன! என்னையா நீ கேட்கிறாய்? காலம் கெட்டுப் போய்விட்டதப்பா, கெட்டுப்போய் விட்டது!'' என்று குதித்தார் அவர்.

அதற்குள் அடுத்த அறைக்குள்ளிருந்து குரல் கொடுத்த உருவம் நேரில் காட்சி கொடுக்க வந்து விட்டது. ''நாங்களா? நாங்கள்தான் இந்த வீட்டுச் சொந்தக்காரர்கள்!'' என்று அழுத்தந் திருத்தமாய்க் கூறியது அது.

முருகையனுடைய கோபம் அந்தப் பெண்ணைக் கண்டவுடன் எங்கேயோ பறந்துபோய் விட்டது. திடீரென்று ஓர் இளம் கவிஞனின் முன்னால் பளிச்சென்று வானவில் தோன்றினால் அவன் எவ்வாறு வியப்புறுவானோ, அவ்வாறே முருகையனும் நின்றான்.

அவனுடைய கிராமத்திலும் சரி, திருச்சி நகரத்திலும் சரி, அவன் அத்தகைய பேரழகியை அதுவரையில் கண்டதே இல்லை. அடுக்கு மல்லிகைப்பூவைப் போல் அவள் எடுப்பான தோற்றத்தோடு அவள் இரட்டைச் சடைப் பின்னல்கள் அசைந்தாட அங்கு வந்து நின்றாள். அவளுடைய பட்டுப் பாவாடை, தாவணி அவளுடைய அணிகலன்கள் எல்லாவற்றிலுமே ஒரு புதுமையைக் கண்டான் முருகையன். பார்த்த கணத்தில் மனத்தில் பதியக் கூடிய ஒரு தோற்றந்தான்.

முருகையன் தன்னை மறந்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தது அந்த மனிதருக்குப் பிடிக்கவில்லை.

''தம்பி! கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் இருந்தால், நான் உன்னை வெளியே போகச் சொல்வேன்'' என்றார் அவர்.

''நானா? நான் வந்து...நான் வந்து..''

அந்தப் பெண் கலீரென்று வாய்விட்டுச் சிரிக்கவே, அவன் தலையைக் குனிந்துகொண்டு மளமளவென்று அவர்களைக் கடந்து உள்ளே விரைவாகச் சென்றான்.

'என்ன துணிவு இவனுக்கு?' என்று கேட்பது போல் தாத்தாவும் பேத்தியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். மீறிச் செல்பவனைத் தடுக்கத் தாத்தாவுக்குத் தெம்பில்லை. அவர் பட்டணவாசி.

''பாட்டி! பாட்டி!'' என்று அழைத்துக் கொண்டே சமையலறைக்குள் திரும்பினான் முருகையன். இருவரும் அவனை வேகமாகப் பின்பற்றிச் சென்றார்கள்.

''யார் முருகையனா? வாப்பா, வா! அப்பாவுக்குத் தெரிந்திருந்தால் ரயிலுக்கு வண்டி கொண்டு வந்திருப்பாரே?'' என்று ஆவலோடு வரவேற்றாள் அங்கிருந்த கிழவி. ஓடி வந்து அவனைக் கட்டிக் கொண்டாள்.





வந்திருப்பவன் வீட்டுச் சொந்தக்காரன் என்று தெரிந்தவுடன் கிழவருக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''ஓ! நீதான் முருகையனா? ஒரு கடுதாசி போட்டிருந்தால் நானும் சித்திராவுமே ஸ்டேஷனுக்கு வந்து உன்னை 'ஜம்'மென்று காரில் அழைத்துக்கொண்டு வந்திருப்போமே? சித்திரா! தம்பி தான் உன்னுடை அத்தான்!''

நொடிப்பொழுதில் அந்த மனிதர் 'முருகையனுக்குக் கௌரவப் பணியாளனாக மாறினார். அவன் கையிலிருந்த பெட்டியை வாங்கிச் சித்திரா இருந்த அறையில் வைத்து விட்டு அவனுக்கு உபசாரங்கள் செய்யத் தொடங்கினார். நடந்த விஷயங்களை அவன் மறக்க வேண்டுமென்பதற்காகச் சிரித்துச் சிரித்துப் பேசினார்.

சித்திராவோ தன் முகத்தை இரு கரங்களாலும் மூடிக்கொண்டு ஒருகணம் வெட்கத்தோடு அதே இடத்தில் நின்றாள். பிறகு அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்து விட்டுத் தன் அறைக்குள் ஓடினாள். கிழவர் அவள் பின்னால் சென்று, முருகையனின் காதுகளில் விழும்படி அவளைப் பரிகாசம் செய்ய ஆரம்பித்தார்.

பட்டணத்து மனிதர்களான அவர்களுடைய பேச்சுக்களும் செய்கைகளும் முருகையனுக்கு நூதனமாகத் தோன்றின. அவர்கள் யாரென்று தன் பாட்டியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

சென்னையில் அவன் அப்பாவுக்குத் தங்கை முறையுள்ள ஓர் அம்மாளின் குடும்பம் இருந்தது. குடும்பம் பெரிய குடும்பம். எப்போதாவது இரண்டு மூன்று ஆண்டுகளுக்கொருமுறை அந்த அம்மாள் மட்டும் ஏதாவது ஒரு குழந்தையை அழைத்துக்கொண்டு அங்கே வந்து போவாள். சென்ற முறை அவர்கள் வந்தபோது முருகையன் திருச்சியிலிருந்ததால் அவர்களைச் சந்திக்கவில்லை. அதற்கு முன்பு வந்தபோது சித்திரா சிறுமியாக இருந்தாள்.—ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பு சில நாட்கள் அவனும் சித்திராவும் தோட்டக் காட்டில் ஒன்றாய் விளையாடிய காட்சி இப்போது கனவுபோல் அவன் நினைவில் வந்து நின்றது.

அந்தப் பெரியவர் சித்திராவின் தகப்பனார் இல்லை என்பது மட்டும் முருகைய

னுக்குத் தெரிந்தது. பாட்டியிடம் கேட்டான்.

பாட்டி மெதுவான குரலில் அவரைப் பற்றிய விமர்சனத்தைத் தொடங்கினாள்: ''அந்த ஆள் இருக்கிறானே, அவன் உன் அத்தைக்குத் தூரத்துச் சொந்தமாம். அவர்களுக்கு எடுபிடி வேலை செய்வதும், காரோட்டுவதும்தான் அவனுக்குத் தொழில். இந்த லட்சணத்தில் எதற்கெடுத்தாலும் அதிகாரம் செய்கிறான்; கெடுபிடி செய்கிறான்; உன் அப்பாவையே பம்பரமாய் ஆட்டி வைக்கிறான் என்றால் பார்த்துக்கொள்!''

முருகையன் சிரித்தான். பாட்டி தொடர்ந்து பேசினாள்:

''ஒரு வாரமாய் அவர்கள் இங்கே வந்ததிலிருந்து தினமும் பத்துப் பேருக்கு விருந்து நடக்கிறது. விருந்தென்றால் சாதாரண விருந்தா? குளித்தலை ஒட்டலிலிருந்து பாதம் அல்வாவும் பலகார வகைகளும் வராத நாள் கிடையாது. உன் அப்பாவுக்குச் சாதாரண விருந்தாளி வந்து விட்டாலே கண் தெரியாது. இப்போது பட்டணத்துத் தங்கச்சி காரில் வந்து இறங்கியதிலிருந்து இது கல்யாண வீடாக மாறிக் கொண்டிருக்கிறது.-முருகையா! அந்தக் கிழவன் இருக்கிறானே, அவனைப் போல் பேராசைக்காரனை நான் கண்டதே இல்லை. ஒரு காணி நிலத்தைக் காரில் வைத்துக் கொண்டு ஊருக்குப் போக முடியுமென்றால், தாராளமாய் அதையும் உன் அப்பாவிடம் கேட்டு வாங்கிக் கொண்டு போய் விடுவான்!''

முருகையனுடைய அப்பாவும் சித்திராவின் தாயாரும் அடுத்த தெருவிலிருந்த குமரவேல் வீட்டுக்குப் போயிருக்கிறார்கள் என்று பாட்டி கூறினாள்.

அதற்குள் பட்டணத்து மனிதர் சமையலறைக்குள் வரவே பாட்டியின் பேச்சு ஒய்ந்தது. அவரும் பாட்டி சொல்லியவற்றை மெய்யாக்குவது போலவே அதிகாரத்தில் இறங்கி விட்டார். 'தம்பிக்கு வெந்நீர் போட்டாகி விட்டதா? காப்பி கொடுத்தாகி விட்டதா? ரயில் பிரயாணத்தில் களைத்து வந்திருக்கிற பிள்ளையை உடனுக்குடன் கவனிக்க வேண்டாமா?'

முருகையனுக்குப் பரிந்து பேசுகிற சாக்கில் அவர் பாட்டியை விரட்ட முற்படவே, பாட்டி தனக்குள், 'ஒட்டகத்துக்கு இடம் கொடுத்த கதைதான்' என்று முணுமுணுத்துக் கொண்டாள்.

தாத்தா முருகையனிடம் கேட்டார்: ''தம்பி! காப்பி சாப்பிட்டு விட்டுப் பல் விளக்கலாமா? பல் விளக்கி விட்டுக் காப்பி சாப்பிடலாமா?''

''நான் தோட்டத்துக்குப் போய்ப் பல் விளக்கிக் குளித்து விட்டு வரப் போகிறேன்'' என்று எழுந்தான் முருகையன். உடைகளைக் கழற்றிப் போட்டு விட்டு, இடுப்பில் ஒரு வேஷ்டியும் தலையில் ஒரு துண்டும் சுற்றிக் கொண்டு, வேப்பங் குச்சியைக் கடித்துக் கொண்டே வெளியில் நடந்தான்.

வயல் வரப்புகள் மீது அவன் நடந்து சென்றபோது அவனுக்குச் சித்திராவைத் தவிர வேறு எந்த நினைவும் வரவில்லை. நெல் வயல்களை வளைத்துச்சென்ற கன்னி வாய்க்காலில் இறங்கிப் பல் விளக்கி முகம் கழுவினான். வாய்க்காலின் மறுகரையிலிருந்த தோட்டத்துக்குள் புகுந்தான்.

வாய்க்கால் தண்ணீரின் பாசனம் அந்தத் தோப்புக்குக் கிடையாது. காய்கறிகள், புஞ்சைப் பயிர்கள் முதலியவை அங்கு விளைந்தன. தோட்டத்தின் எதிர் மூலையிலிருந்த பெரியதோர் ஏற்றக் கிணறுதான் அதை ஊட்டி வளர்த்தது.

அவனுக்குப் பின்னால் காய்கறி பறிப்பதற்காக ஒரு கூடையுடன் வந்து கொண்டிருந்த தாத்தாவையும் சித்திராவையும் அவன் கவனிக்கவில்லை. அடர்ந்து வளர்ந்த தக்காளிச் செடிகளைக் கண்டவுடன் தாத்தா ஆவலுடன் அவைகளுக்கு மத்தியில் புகுந்தார். சித்திராவின் கண்களோ ஒரு கணத்துக்கு முன்பு ஏற்றக் கிணற்றின் உச்சியில் நடைபெற்ற அதிசயத்தில் லயித்திருந்தன. - சென்னைக்கு வந்த 'சர்க்கஸ்' வீரர்கள் கூட இப்படிக் குதித்ததில்லையே!

சித்திரா பரபரப்போடு கிணற்றை நோக்கி ஓடினாள். கைப்பிடிச் சுவரில் சாய்ந்து கொண்டு கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தாள். கிணற்றின் அதல பாதாளத்தில் தண்ணீர் கருநீலம் பூத்துக் கிடந்தது. அதற்குள் முருகையன் குதித்து மூழ்கியதற்கான அறிகுறி ஏதும் தென்படவில்லை.

சுற்றிலும் யாருமில்லை என்ற நினைவோடு முருகையன் மேல்துண்டை இடுப்பில் வரிந்து கட்டிக் கொண்டு ஏற்ற மரத்தின் மேல் ஏறினான். கைகளை உயர்த்தியபடியே கிணற்றுக்குள் தலைகுப்புற விழுந்தான்.

சித்திரா பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். ஒரு சில நீர்க்குமிழிகள் தவிர வேறொன்றும் அதன் மேற்பரப்பில் தெரியவில்லை. கண்களால் நீரை ஊடுருவிப் பார்க்க முயன்றாள். நெஞ்சு பதறியது; தலை சுற்றியது; அவளுடைய கண்களிலிருந்து இரண்டு நீர்மணிகள் உருண்டன. -எங்கே முருகையன்? வாய்விட்டு அழ வேண்டும் போலிருந்தது சித்திராவுக்கு. (தொடரும்)

௫

# நரிவேட்டை

கதை:
**ஜெயந்தி**

சித்திரம்:
**வினு**

குமார் தன்னை ஏமாற்றி வந்திருக்கிறான் என்றறிந்ததும் ஆத்திரமடைகிறாள் ஸின்ஸி. இன்றுவரைக் காதலனையே காட்டிக் கொடுத்து விடுகிறாள்.













அது மட்டுமா? காதலனைக் காட்டிக் கொடுத்தேன். நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டேன். அவர் என்னை மன்னிக்க மாட்டார். தயவு செய்து நீங்களாவது என்னை மன்னியுங்கள், அப்பா!


நீண்ட நேரமாகியும் லின்ஸியின் புலம்பல் அடங்கவில்லை. குமார் திரும்பவும் வருகிறான்.
லின்ஸி! நாங்கள் போலீஸ் படையுடன் கிளம்புகிறோம். உன்னிடம் சொல்லிக் கொண்டு போக வந்தேன்.
இதோ நானும் தயார்!


என்ன?
நீங்கள் எவ்வளவு தடுத்தாலும் நான் கேட்கவே மாட்டேன்.


தர்க்கத்துக்கு இது சமயமில்லை குமார்! நேரமாகிறது.
வேண்டா வெறுப்பாக லின்ஸி உடன் வருவதற்குச் சம்மதிக்கிறான் குமார்.


நான்கு ஜீப்புகள் உறுமிக் கொண்டு புறப்படுகின்றன.


ஸாஷாவின் பங்களாவை அடைந்ததும் அதனை நாலாபுறமும் ஆயுதம் தாங்கிய போலீஸார் சூழ்ந்து கொள்கின்றனர்.
ஸாஷா! இனி நீ தப்ப முடியாது! மரியாதையாகச் சரணடைந்து விடு!

பூசுங்கள் !

பூசுங்கள் !!

மரச்சாமான்

களுக்குப்

பூசுங்கள் !!!

ஷாலிமார்
உட்கோட்
உபயோகியுங்கள்
ஏராளமாக
1905-முதல்
விற்பனையாகி வருகிறது.

50 ஆண்டுகளுக்கு மேலாகவே தனிச்சிறப்பு வாய்ந்த ரெடி மிக்ஸ்ட் பெயிண்ட் என்று நீடித்த பெயர் வாங்கியிருப்பதன் காரணம்—

- மிக நன்றாக அரைக்கப்பட்டு விசேஷமான வார்னிஷையும் (மெருகிடும் எண்ணெயையும்) சாதனமாகக் கொண்டிருப்பதால் நன்கு பரவி இறுகிக்கொள்வதற்கும் நீடித்து உழைப்பதற்கும் உத்தரவாதம் அளிக்கிறது.
- சாமான்களுக்கு உறுதியையும் மிக பளபளப்பையும் கொடுக்கிறது.
- உள்பூச்சுக்கும் வெளிப்பூச்சுக்கும் நன்கு ஏற்றது.
- 26 மிக அழகான நிறங்களில் கிடைக்கின்றன.

முழு விவரங்களுக்கு தபால் பெட்டி நீ 68, கல்கத்தா-1க்கு எழுதி டேட்டா ஷீட் நீ DS. 1/3/60யைப் பெற்றுக்கொள்ளவும்

**SHALIMAR PAINT**

ஷாலிமார் ஸுபர்லாக் ஸிந்தெடிக் எனமல் தயாரிப்பாளர்கள்




IWTSPW 615 TM

# மணிபல்லவம்

## 4 - புகழ் வெள்ளம் . . . . .

வாழ்நாளெல்லாம் அறிவுப் போரிலேயே செலவிட்டு வெற்றி மேல் வெற்றி பெற்ற பெருமக்கள் ஒவ்வொருவராகத் தனக்குத் தோற்பதைப் பார்த்தபோது இளங்குமரனுக்குத் தயக்கமாக இருந்தது. வெற்றியை மெய்யின் வெற்றியாகவும், தோல்வியைப் பொய்யின் தோல்வியாகவும் நினைத்து மனம் விகாரமடையாமல் காத்துக் கொண்டான். வாதத்தில் அவன் வென்று முன்னேற முன்னேற 'நாவலோ நாவல்' என வெற்றி முழக்கமிடும் புகழ்க் குரல்கள் மிகுந்து ஒலித்தன. கண்களை அகல விழித்து அவனையே தெய்விக ஆற்றலாகக் கருதிப் பார்க்கும் முகங்கள் அதிகமாயின. பார்க்கிற கண்களில் எல்லாம் பார்க்கப்படுகிற கண்களின் மேல் பக்தி பிறந்தது.

'அலை அலையாகப் புரண்டு வரும் இந்தப் புகழ் வெள்ளத்தில் நான் நிற்க வேண்டிய எல்லையில் கால்களும், என் மனம் நிற்க வேண்டிய எல்லையில் நினைவுகளும்-தரித்து நிற்க முடியாமல் மிதந்து போகும்படி ஆகிவிடக் கூடாது. எல்லையற்ற இந்தப் புகழைப் பார்க்கும்போது எனக்குப் பயமாயிருக்கிறது. படிப்பினால் அழிந்த ஆணவத்தைப் படிப்பின் பயனாகப் பெற்றால் மறுபடியும் அதை எப்படி அழிக்க முடியும்? புகழை உணர்வதற்கும், உணர்ந்ததை நினைந்து அநுபவிப்பதற்கும் மனத்தில் பழகியும் பழக்கியும், புகழுக்கே அடிமையாகிவிடாமல் நான் விழிப்பாயிருக்க வேண்டும். புகழில் அமிழ்ந்தால் நான் விரைவாக மூப்படைந்து விடுவேனோ என்று நடுங்குகிறேன். புகழில் மிதந்தாலோ நான் சோம்பற்குண முடையவனாகி விடுவேனோ என்று அஞ்சுகிறேன். புகழ் என்னுடைய முயற்சிகளை ஒடுக்கி விடலாம். என் மனம் இலக்குவைத்திருக்கின்ற குறிக்கோள்களை மறைத்துப் பொய்யான இலக்குக்களையும் காட்டிவிடலாம். புகழ் வெள்ளத்தின் அலைகளே! சூழ்ந்திருப்பவர் முகங்களிலும், கண்களிலும் என்னை நோக்கி மலரும் பிரசித்திகளே, பிரதாபங்களே, - நான் நிறுவிய உண்மைகளைப் போய்ச் சார்ந்துகொள்ளுங்கள். என்னை விட்டுவிடுங்கள்' என்று புகழில் மனம் நனைந்து போகாமல் ஆணவத்துக்குக் காரணமான நினைவுகளை விலக்கி விட்டு அவன் நடந்தபோது அவன் விலக்கிய ஆணவங்களை ஒருருவம் ஆனாற்போன்று எதிரே வந்து அவனை வாதுக்கு அழைத்தான் ஓர் இளைஞன். அந்த இளைஞனுடைய உருவமும் அவன் பேசிய சொற்களும் நின்ற நிலையுமே இளங்குமரனைத் தடுத்து நிறுத்தின. அவனுடைய தோற்றத்தைப் போலவே சொற்களும் அழகாயிருந்தன.




''உயிர் என்றும், ஆன்மா என்றும் தனியாக எதுவும் இல்லை. என்னுடைய உடம்பே உயிர். அதுவே ஆன்மா. நான் இளைத்தேன். நான் பருத்தேன். நான் கறுத்தேன்-என்று உடம்பைச் சுட்டிக் காட்டியே குணங்களும், தொழில் நிகழ்ச்சிகளும் கூறப்படுகின்றன. எனவே தேகமே ஆன்மா என்று நான் கூறுகிறேன். இந்த முடிவை நீ எப்படி மறுக்க இயலும்?''-இப்படித் திமிரோடு பேசினான் அந்த இளைஞன்.

அந்த இளைஞனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே சொன்னான் இளங்குமரன்:- ''தம்பீ! உன்னுடைய முடிவே உன் கருத்துக்குப் பெரிய மறுப்பாக இருக்கிறதே. நான் வேறு மறுக்க வேண்டுமா? நீ எந்தக் கருத்தைச்சொல்வதற்குத் துணிகிறாயோ, அந்தக் கருத்துக்கே மாறான முடிவைக் தருகிறது உன்னுடையசித்தாந்தம். இப்படி வாதத்தைத் தொடங்குவதே 'அவசித்தாந்தம்' என்னும் தருக்கக் குற்றம். ஆனாலும் கேள். உன்னையும் உன் உடம்பையும் இணைத்து வார்த்தையால் கூற வேண்டுமானால் நீ எப்படிக் கூறுவாய்?''

''இது என்ன கேள்வி? 'எனது உடம்பு' என்று கூறுவேன். அல்லது 'என்னுடைய உடம்பு' என்று கூறுவேன்'' என்றான் அந்த இளைஞன்.

''கூறுவாய் அல்லவா? நீயே உடம்பாகவும், உடம்பே ஆன்மாவாகவும் இருப்பாயானால் என்-உடைய-உடம்பு என்று ஏன் உடைமையும், உடையவனும் வேறாக இருப்பதைத் தொடர்பு

படுத்திக் கூறுவது போல் பேசுகிறாய்? உன் பேச்சிலிருந்தே உயிர் வேறு உடம்பு வேறு என்பது தெரிகிறதே? உடையவனையும் உடைமையையும் சம்பந்தப்படுத்துகிற தொடர்பு இரண்டு வகையானது. உடையவனிலிருந்து பிரித்தால் தனித்தும் இயங்குகிற உடைமை, பிரித்தால் தனித்து இயங்காத உடைமை என்பனவே அவை. 'எனது உடம்பு' என்கிறாய். இதில் உன்னையும் உடம்பையும் தனித்தனியாகப் பிரிக்க இயலாது. 'எனது வீடு' என்று சொல்கிறாய். இதில் உன்னையும் வீட்டையும் தனித்தனியே பிரிக்க இயலும். பிரிக்க முடியாமல் தன்னோடு தானாகவே இணைந்த சம்பந்தத்துக்குத் தற்கிழமை என்றும், பிரிக்கமுடிந்த சம்பந்தத்துக்குப் பிறிதின் கிழமை என்றும் பெயர். உடம்போடு ஆன்மாவுக்கு உள்ள சம்பந்தம் தற்கிழமை. இதை நீயே உன்னுடைய சொற்களால் ஒப்புக் கொண்டவன் ஆகிறாய். தம்பீ! சாருவாக மதத்தில் மிக இளம் பருவமாகிய இந்த வயதிலேயே உனக்குப் பெரும் பற்று ஏற்பட்டு விட்டுப் போயிருக்கிறது. இளமையில் உன்னைக் கவர்வனவெல்லாம் என்றும் உன்னைக் கவர முடியும் என்று நினைக்காதே. சாருவாகர்கள் அழகிய சொற்களை மட்டுமே காதலிக்கிறார்கள். சொற்களுக்கு அப்பால் அவற்றின் பயனாக உள்ளவற்றைப் பற்றி அவர்கள் நினைப்பதே இல்லை. இரண்டு சொற்களில் விளக்க வேண்டிய கருத்தை இருபது சொற்களால் அடுக்கி விளக்குவது வாதமுறைக்கு முரண்பாடான பிழைகளில் ஒன்று. தேவைக்கு அதிகமான சொற்களைக் கொண்டு எந்தப் பொருளை வற்புறுத்த முயல்கிறோமோ அந்தப் பொருள் அப்படி வற்புறுத்துவதனாலேயே நைந்து போகும். எல்லையை மீறி உண்டாகும் பலமே ஒரு பலவீனம். அதிகமாக முறுக்கப்பட்ட கயிறு அதனாலேயே அறுந்து போவதைப் பார்த்திருப்பாய். 'சொற்பல்குதல்' என்பது தருக்கத்தில் குற்றம். அந்தக் குற்றத்தை உன் போன்ற சாருவாகர்கள் தொடர்ந்து செய்து கொண்டு வருகிறீர்கள்.''

இவற்றையெல்லாம் கேட்டதும் அந்தப் பிள்ளை எவ்வளவு வேகமாக எதிர்த்து வந்து நின்றானோ அவ்வளவு வேகமாகத் துவண்டு போனான். ''தம்பீ! நிறைவடையாத அறிவுக்குப் 'புல்லறிவு' என்று பெயரிட்டிருக்கிறார்கள். புல்லறிவினால் ஏற்படுகிற ஆண்மை உறுதியானது என்று தம்பி அதையே வாதத்துக்குப் பலமாகக் கொண்டு வாதிடுவதற்கு வரக் கூடாது. மேட்டு நிலத்தில் உள்ள முற்றாத இளம் புல்லைக் கிழட்டுப் பசு மேய்ந்தது போல் நிறைவடையாத நுகர்ச்சியால் வந்த புல்லறிவாண்மை வாதத்துக்குப் பயன்படாது'' என்று போவதற்கு முன் அவனுக்கு அறிவுரை சொல்லி அனுப்பினான் இளங்குமரன்.

அந்தக் கூட்டத்தில் இப்போது இளங்குமரனுக்கு முன்னால் வந்து நிற்பதற்கே பயப்படுகிறவர்கள் அதிகமானார்கள். 'இவன் ஞானத்தை நிறைத்துக் கொள்வதற்கான நூல்களை மட்டும் கற்றுக் கொண்டு வரவில்லை. மற்றவர்களை வெல்வதற்கான தவவலிமையையும் சேர்த்துப் பெற்றுக் கொண்டு வந்திருக்கிறான். இவனுக்கு முன்னால் நிற்கும் போதே நம்முடைய கல்வி குறைபாடு உடையதாக நமக்குத் தோன்றுகிறதே' என்று தயங்கினார்கள். வைதிக சாத்திரங்களாகிய மீமாம்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தம் ஆகிய ஆறு தரிசனங்களிலும், வல்லவர்கள் பலர் அந்தக் கூட்டத்தில் இருப்பது இளங்குமரனுக்கு விளங்கிற்று. 'நீருட்கிடப்பினும் கல்லிற்கு மெல்லென்றல் சால அரிதாவதைப்' போல நூல்களைக் கற்றிருந்தும் அவற்றில் மனம் தோயாத காரணத்தால்தான் அவர்களெல்லாம் மலைத்து நிற்கிறார்களென்று அவனுக்குப் புரிந்தது. எதிரே வந்து தன்முன் கொடியை நடுவதற்கு இன்னும் யாராவது தென்படுகிறார்களா என்று பார்த்துக் கொண்டு நின்றான் அவன். யாரும் வருவதாகத் தோன்றவில்லை. இரவு வளர்ந்து நேரமாகிவிட்டபடியால் கூட்டம் மெல்ல மெல்லக் கலையத் தொடங்கியது. நெருங்கி நின்ற பெருங் கூட்டம் கலைந்ததனால் இளங்குமரன் தனது யானையை நிறுத்தி விட்டு வந்த இடத்துக்குப் போவதற்கு வழியில்லை. தேரும், சிவிகையும், குதிரைகளுமாக முந்திக் கொண்டு விரைந்த அந்தக் கூட்டத்தில் இருந்தாற்போல் இருந்து பரிதாபகரமான துயரக் குரல் ஒன்று எழுந்தது. கூட்டத்தில் மிக அருகிலிருந்து எழுந்த அந்தக் குரலைக் கேட்டு இளங்குமரன் திரும்பினான். கண்பார்வை மங்கி முதுகு கூன் விழுந்த மூதாட்டி ஒருத்தி கூட்டத்தில் திணறிக் கொண்டிருந்தாள். ஊன்றுகோலையே கண்ணாகக் கொண்டு நடந்து கொண்டிருந்த அவள் அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கூட்டத்தினால் நெருக்குண்டு தடுமாறி விழுந்தாள். ஏதோ ஒரு பல்லக்கின் முன் பக்கத்துக் கொம்பைச் சுமந்து கொண்டு வந்த யவனன் ஒருவன் கீழே குனிந்து பாராததனால் கவனக்குறைவாய் அந்த மூதாட்டியை மிதிப்பதற்கிருந்தான்.

அவளைக் கைதூக்கி நடத்திக் கொண்டு போய் நேரான வழியில் விடுவதற்காக இளங்குமரன் ஓடினான். அந்த முதுமகள் விழுந்த இடத்திலிருந்தவர்களே அதற்குள் அவளைத் தூக்கி விட்டிருக்கலாம். ஏனோ செய்யவில்லை. மிதிப்பதற்கிருந்த பல்லக்குத்தூக்கி கூடக் கீழே பார்த்து விட்டு அருவருப்போடு துள்ளி விலகுவதையும் இளங்குமரன் கண்டான். சுற்றிலும் இருந்தவர்கள் கூசி விலகுவதையும், கீழே விழுந்திருப்பவளைப் பார்த்து ஏதோ இரைவதையும் கவனித்து இன்னும் வேகமாக நடந்து அவளை அணுகினான் அவன். அருகிற் போனதும் மற்றவர்கள் அவனைத் தடுத்தார்கள்.

''தொடாதீர்கள், அவளுக்குப் பெருநோய்'' என்று பல குரல்கள் இளங்குமரனை எச்சரித்தன. தன் உடம்பின் அழகால் தானே பெருமிதப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் இப்படி ஓர் உதவி செய்ய நேர்ந்திருந்தால் அவன் பயந்து பின்வாங்கியிருப்பானோ, என்னவோ? இப்போது அப்படிப் பயந்து பின்வாங்கவில்லை. கையை முன்னிரித்துக் குனிந்தான் அவன். அப்படிக் குனிந்த போது, ''ஐயோ! வேண்டாம். கீழே கிடக்கிறவள் உங்களைப் பெற்ற தாயாக இருந்தாலும் தீண்டத் தகாத நோய் இது'' என்று இனிய குரல் ஒன்று மேலே பல்லக்கிலிருந்து ஒலித்தது. ஒரு விநாடி அந்தக் குரலுக்குரியவளைப் பார்ப்பதற்காக நிமிர்ந்தான் இளங்குமரன். பார்த்த போது பார்க்கப்பட்ட முகத்தினால் தானே சிறிது வியப்பு அடைவதை அவனும் தவிர்க்க முடியவில்லை. 'சுரமஞ்சரியா' என்று அவன் நாவிலிருந்து மிகவும் மெல்ல ஒலித்த பெயர் அவளுக்குக்கூடக் கேட்டுவிட்டது போலிருக்கிறது. ''சுரமஞ்சரி இல்லை. அவளுடைய சகோதரி வானவல்லி'' என்று அந்தப் பெண் மறுமொழி கூறினாள். அப்படி மறுமொழி கூறும்போது அவள் முகத்தில் பயத்தின் நிழல் படிந்து மறைவதைக் காண முடிந்தது. அந்த உணர்ச்சி நிழலில் அவள் வேறு எதையோ மறைத்துக்கொள்ள முயல்வதும் தெரிந்தது. இளங்குமரன் சிரித்து விட்டு அவளை நோக்கிச் சொன்னான்:-

''அம்மணி! நீங்கள் இதைப் பெருநோய் என்று சொல்லிப் பயப்படுகிறீர்கள், பயப்படுத்துகிறீர்கள். இதைவிடக் கடுமையான பெருநோய் ஒன்று இருக்கிறது. அதை உங்களுக்குச் சொல்லட்டுமா? பிறருடைய துன்பத்தைக் கண்டும் மனம் இரங்காமல் தன்னுடைய கௌரவத்தையே நினைத்துக் கூசுகிற மனத்தில் அந்தக் கூச்சம்தான் பயங்கரமான பெருநோய். நெடிய வார்த்தைகளைச் சொல்லிப் பிறரை ஏவியும், கட்டளையிட்டும், ஆள்வதையோ, வேகமாகத் தேரிலும், சிவிகையிலும் ஏறிப்போவதையோதான் செல்வத்தின் இலட்சணங்களாக நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நான் செல்வமாக நினைப்பது துன்பப்படுகிறவர்கள் மேல் உண்டாகிற அநுதாபத்தையும், உதவி செய்யும் ஆவலையும்தான். மனத்தை அரித்தெடுக்கின்றதனால் ஆசைதான் 'பெருநோய்' என்கிறேன் நான். என் கண்களுக்கு முன்னால் இந்தப் பிரபஞ்சத்தில் என்னிலிருந்து அந்நியமாகவும், அயலாகவும் தெரிகிற எல்லா உயிர்களும் எந்தக் கணமும் சிறிதுகூடத் துன்பப்படாமல் இருக்க வேண்டும் என்று - மற்றவர்களுக்குத் துன்பம் வரக்கூடாது என்பதற்காக எனக்குள்ளேயே நான் மனப்பூர்வமாக அஞ்சி அநுதாபப்படுகிற உணர்வுதான் பெரிய செல்வமென நம்புகிறேன். பெற்றதாயாயிருந்தாலும் தீண்டத் தகாத நோய் இது என்று பயமுறுத்துகிறீர்கள். நான் இந்த உலகத்தை இப்போது பார்க்கிற பார்வையில் எல்லாப் பெண்களிலும் தாயைக் காண்கிறேன். எல்லாத் தாய்களிலும் பெண்ணைக் காண்கிறேனில்லை. எல்லாப் பெண்களிலும் என் தாயைக் காண்கிறேன். என் தாய்மையையே உணர்கிறேன்.....''

அவனுடைய தத்துவத்தை இதற்குமேல் கேட்க விருப்பமில்லாதது போல் அந்த அழகிய முகம் பல்லக்குக்குள் மறைந்தது. உடனே பட்டுத் திரையும் விழுந்து பல்லக்கை மூடியது.

உலகத்திலேயே அதைக் காட்டிலும் பெரிய மகிழ்ச்சியைத் தரக்கூடிய காரியம் வேறொன்று இல்லாதது போல் சிரத்தையோடு அந்த மூதாட்டியைத் தொட்டுத் தூக்கி ஊன்றுகோலைக் கையில் எடுத்துக் கொடுத்துச் சிறிது தொலைவு தழுவினாற் போலத் தாங்கி

நல்லி பனகல் பார்க் நல்லி பனகல் பார்க் நல்லி பனகல் பார்க்

# கல்யாண ஜவுளிகளை

சௌகரியமாகத் தேர்ந்தெடுப்பதற்கென்றே பிரத்யேக வசதியுடன் கூடிய

## ஏர்-கண்டிஷன் ஹால்

அமைத்துள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறோம்

## நல்லி சின்னசாமி செட்டி

**பனகல் பார்க் எதிரில்**

தியாகராய நகர் (போன்: 88115) சென்னை-17.

பின்னியின் சிறந்த ரகங்கள் அனைத்தும்
எமது பிரத்தியேக ஷோ ரூமில் கிடைக்கும்

நல்லி பனகல் பார்க் நல்லி பனகல் பார்க்

---

## நான்கு மருந்துகள் அடங்கியுள்ள

# 'அனாஸின்'

| வலிகளைப் போக்குகிறது | நிம்மதி அளிக்கிறது | சோர்வை விரட்டுகிறது | ஜுரத்தைத் தணிக்கிறது |
|---|---|---|---|

ஒரு டாக்டர் குறித்துக் கொடுக்கும் பாதுகாப்பான மருந்துக்கு ஒப்பாக, விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகள் அனாஸினில் ஒன்றுகலந்து இருப்பதால், வலிகளினின்று அதிவிரைவில் பூரண நிவாரணம் அளிக்கிறது. (2) பதட்டத்தைப் போக்கி நிம்மதி அளிக்கிறது—இதனுடன் இரட்டிப்பான பலனை நீங்கள் பெறுவீர்கள். (3) சோர்வை விரட்டுகிறது. (4) ஜுரத்தைத் தணிக்கிறது.

நான்கு மருந்துகள் அடங்கியுள்ள 'அனாஸின்' வலிகளினின்று நிவாரணம்பெற மிகச் சிறந்தது. வீட்டில் எப்பொழுதும் அனாஸின் வைத்திருங்கள்.

★ மெட்ராஸிலேயே நான்குமுறை சுகாதார முறையில் பாக் செய்யப்பட்டு கிடைக்கிறது. இரு வில்லைகள் 15 காசுதான்.






**அனாஸின் மிகச் சிறந்தது**

*Registered User:* GEOFFREY MANNERS & CO. LIMITED.

TAM. Z. 49

## டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூர்ண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மிதமிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

நடத்திக் கொண்டு போய் நெருக்கமில்லாத வழியில் அனுப்பி விட்டுத் திரும்பினான் இளங்குமரன். திரும்புமுன் அந்த முதுமகள் கூறிய நன்றியுரை இன்னும் தன் செவிகளில் ஒலித்துக் கொண்டேயிருப்பதாக உணர்ந்தான் இளங்குமரன்.

"பழுத்துத் தளர்ந்த பாகற் பழம் போல் இமைகள் தொங்கிப் பார்வையை மறைக்கிறதப்பா. நீ யாராயிருந்தாலும் உன்னை ஒருமுறை கண் குளிரப் பார்க்க வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது. ஆனால் பார்க்க முடியவில்லை. என்றாலும் உன்னுடைய முகத்தைப் பார்க்க முடியவில்லையானாலும் அகத்தைப் பார்க்க முடிகிறது. பிறர் மேல் கருணை கொள்வதையே பெருநிதியாகக் கருதும் நெஞ்சுக்கு உரியவன் எப்படி இருக்க முடியுமென்று நினைத்து நினைத்து-அந்த நினைப்புக்களையே கோடுகளாக இழுத்து என் நெஞ்சில் உன் உருவத்தை எழுதிப் பார்க்கிறேன். அப்படி எழுதிப் பார்க்கும்போது சாந்தம் திகழும் கண்களை அகல விழித்து அவற்றில் பெருகும் கருணையையே அழகாகக் கொண்டும் நித்திய சௌந்தரியத்தின் எல்லைகளாய் இரண்டு கைகளை நீட்டிக் கொண்டும் நீ உருவாகி நிற்கிறாய்!" என்று அந்த முதுமகள் நாத் தழுதழுக்கச் சொல்லிய போது அவளுடைய சொற்களில் மனமும் உணர்வுகளும் குழைந்து பரிவு பெருக நின்றான் இளங்குமரன். அவளுக்கு ஏதாவது பதில் சொல்ல வேண்டுமென்று அவன் நினைத்தும் சொல்ல வரவில்லை. அவள் பேசியதைக் கேட்ட பின்பு அவனுக்குப் பேசவே வரவில்லை.

அந்த முதுமகள் நிறையக் கற்றவளாய் இருக்க வேண்டுமென்று அவளுடைய சொற்களிலிருந்து புரிந்தது. அவளுடைய சொற்களுக்குப் பின் தன்னுடைய சொல்லாமையே-மௌனமே மதிப்பு நிறைந்ததென்று எண்ணிக் கொண்டு யானை நின்ற இடத்துக்குத் திரும்பி நடந்தான் அவன்.

அவ்வாறு நடக்கும் போது தன்னுடைய பழைய சொற்களையே மறுபடியும் நினைத்துக் கொண்டான். 'எல்லாருடைய தாய்களிலும் என்னுடைய தாய் இருக்கிறாள். என்னுடைய தாயாரைத் தெரிந்து கொள்ளுகிறவரை எல்லாப் பெண்களையும் தாயாகவே பார்க்கிறேன் நான். தாயாகவே உணர்கிறேன்.'

-'இன்று இந்த மூதாட்டிக்கு உதவினோம்' என்று திரும்பத் திரும்ப நினைத்து - இப்படி நினைப்பதாலேயே மனத்தில் கர்வச் சுமை ஏறி விடுமோ' என்ற பயத்தை உணர்ந்தவனாக யானை மேல் ஏறினான் இளங்குமரன்.

மீண்டும் புகழில் நனைந்து விடாமலும், மிதந்து விடாமலும் தன்னைத் தன் நிலையில் நிறுத்திக் கொள்ள வேண்டுமென்ற விழிப்பு அவனுக்கு ஏற்பட்டது.

## 5. இருண்ட சமயம்

'மறுபடியும் நாளைக்கு இந்த அறிவுப் போர்க்களத்தில் வந்து எதிரிகளைச் சந்திக்கலாம். இன்று இவ்வளவில் திரும்புவோம்' என்ற தீர்மானத்தோடு யானையை ஆலமுற்றத்து வழியில் செலுத்துவதற்கு இருந்தான் இளங்குமரன். அப்போது அவனுடைய யானைக்கு முன்னால் காபாலிகப் பெண் ஒருத்தி வந்து நின்றாள். பொது இடங்களில் இப்படித் துணிந்து புறப்பட்டு வந்து பழகும் வழக்கமில்லாத காபாலிக சமயத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தியை எதிரே கண்டதும் இளங்குமரன் சிறிது திகைப்படைந்தான். சம்பாபதி வனத்திலும், சக்கரவாளக் கோட்டத்தைச் சுற்றியிருந்த காடுகளிலும் விடலைப் பிள்ளையாய்த் தன் நண்பர்களோடு சுற்றித் திரிந்த காலத்தில் அவன் காபாலிகர்களை நிறையப் பார்த்திருக்கிறான். அந்தச் சமயங்களில் எல்லாம் எலும்பு மதம் என்றும் மண்டையோட்டு மதம் என்றும் அவனும் நண்பர்களும் வேடிக்கையாகச் சொல்லி அந்தச் சமயத்தைப்பற்றி எள்ளி நகையாடியதும் உண்டு.

இப்போது அதே மண்டையோட்டு மதத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தி எதிரே வந்து நிற்கிறாள்.

"உங்களுக்கு என்ன வேண்டும் அம்மணி! இந்த நாளங்காடிச் சதுக்கத்திலும் இதன் அழகிய சுற்றுப் புறங்களிலும் நீங்கள் விரும்புகிற விதமான பொருள்களில் எதுவும் கிடைக்க வழியில்லையே? எலும்புகளும், சுடலைச் சாம்பரும் இல்லாத இடத்துக்குக் கூட நீங்கள் வருவதுண்டோ?" என்று அவளை நோக்கிக் கேட்டான் இளங்குமரன்.

அவன் தங்கள் சமயத்துக் கொள்கைகளை இகழ்ந்தாற் போன்ற தொனியிற் பேசியதால் சிறிதே சினம் கொண்டவளாகி அவனை உறுத்துப் பார்த்தாள் அவள்.

"நாங்கள் எங்கும் வருவோம். பயப்படுவதற்கு நாங்கள் கோழைகள் அல்ல; கொடிய வீரத்தையே சிவமாகக் காண

கிற எங்களால் எந்த இடத்திலும் நாங்கள் விரும்பியவாறு சென்று செயற்பட முடிகிறது.''

''அம்மணி! நீங்கள் எப்போதும் பயப்படுவதில்லை. ஆனால் உங்களைப் பார்க்கிறவர்கள் பயப்படாத நேரமும் இல்லை. 'எந்த இடத்திலும் நாங்கள் விரும்பிய சூழ்நிலையை உண்டாக்கிக் கொள்ள முடியுமென்று கூறினீர்களே'—அது மட்டும் மறுக்க முடியாத உண்மை என்று நானும் ஒப்புக் கொள்கிறேன், அம்மணி! இவ்வளவு நேரம் வரை இந்திரவிழாக் கோலம் பூண்டு மணமங்கல வினைநிகழும் வீடு போலத் தோன்றிக் கொண்டிருந்த இந்த இடத்தில் நீங்கள் ஒருவர் வந்து நின்றவுடனேயே மயானத்தின் சூழ்நிலை உண்டாகி விட்டது, பாருங்களேன்! இதிலிருந்தே நீங்கள் சொல்வது மெய்யென்று தெரிந்துகொள்ள முடிகிறதே'' என்று நகை விளைக்கும் சொற்களாலேயே அவளை வாதில் நலியச் செய்தான் இளங்குமரன். ஆனால் அவளோ அவனிடம் வேறு வேண்டுகோள் விடுத்தாள்:

''நானே உன்னை வாதுக்கு அழைக்க வரவில்லை. அழைத்துக் கொண்டு போவதற்குத்தான் வந்தேன்.''

''எங்கே அழைத்துக் கொண்டு போக வந்தீர்கள்? 'அழைத்துக் கொண்டு' என்று நீங்கள் சொற்களை உச்சரித்த போது 'அழைத்துக் கொன்று' என்பது போல் அல்லவா என் செவிகளில் ஒலித்தது. காபாலிகர்கள் அசைவர்களாயிற்றே? அதனால்தான் சிந்திக்க வேண்டியிருக்கிறது, அம்மணி.''

''இதில் சிந்திப்பதற்கும் தயங்குவதற்கும் ஒன்றுமில்லை. இந்த நகரத்திலேயே மிகவும் குறைவானவர்கள் நாங்கள். சக்கரவாளக் கோட்டத்தில் சுடுகாட்டுக்கு அருகிலுள்ள வன்னி மரங்களின் நிழலிலேயே எங்கள் உலகம் அடங்கிப் போய் விடுகிறது. அதற்கு இப்பால் அகநகரிலும் புறநகரிலுமாகப் பரவிக் கிடக்கும் இந்தப் பட்டினத்தின் வித விதமான வாழ்க்கை வளங்களைப் பற்றி எங்களுக்கு ஒன்றும் தெரியாது.''

''அகநகரிலும், புறநகரிலும் வாழ்ந்தவர்கள் தலையெல்லாம் உங்கள் கையிலிருக்கும் போது நீங்கள் கவலைப்படுவானேன்....?''

''எதைச் சொல்கிறாய் நீ?''

''இறந்தபின் இந்தப் பட்டினத்தின் மக்கள் அத்தனை பேருடைய கபாலங்களையும் நீங்கள்தானே ஆளுகிறீர்கள்?''

''இகழ்ச்சியை வளர்க்காதே, தம்பி! வன்னி மன்றத்தில் எங்கள் குரு காத்துக் கொண்டிருப்பார். நீ உடனே என்னுடன் அங்கு வந்து அவரோடு வாதம் புரிய வேண்டும்.''



''இந்த [illegible]தான் வாதம் புரிய வேண்டுமா? நாளைக்குப் பகலில் வரலாமென்று பார்க்கிறேன். எல்லா வாதங்களும் நடைபெறும் இந்த இடத்துக்கே உங்கள் குரு வந்தாலும் நல்லதுதான். அவர் என்னைச் சந்திப்பதோடு மற்றவர்களையும் சந்தித்துவாதிடலாம்.''

''அது சாத்தியமில்லை, அப்பனே! எங்கள் குரு வயது மூத்தவர். எங்கும் வர இயலாதவர். நள்ளிரவுக்குப் பின்புதானே எங்களுடைய உலகமே உதயமாகிறது. பகலில் வாதம் புரிய வந்து என்ன பயன்?''

''உண்மைதான், அம்மணி! உங்கள் சமயமே இருண்ட சமயத்தில்தான் தன் செயல்முறைகளைத் தொடங்குகிறது.''

''அதனால்தான் இந்த இருண்ட சமயத்தில் உன்னை வந்து அழைக்கிறேன்;



யார் வந்து வாதுக்கு அழைத்தாலும் மறுக்காமல் வருவதுதான் மெய்யாகவே ஞானபலம் பெற்றவனுக்கு இலட்சணம். ஞானிக்கு இருள் என்ன? ஒளி என்ன? உன்னுடைய மனத்தில் தைரியமிருந்தால் என்னோடு வா. இல்லையானால் முடியாதென்று சொல்!''

இதைக் கேட்டு இளங்குமரன் யானை மேலிருந்து கீழே இறங்கினான்.

''அழைத்துச் செல்லுங்கள். வருகிறேன்'' என்றான் அவன்.

அந்த முரட்டுக் காபாலிக நங்கை பிசாசுபோல் முன் நடந்தாள். பூதகிக்கு அருகில் கண்ணபிரான் சென்றது போல் கொடியேந்திய கையினனாக இளங்குமரன் அவள் நடந்த வழியே தொடர்ந்து சென்று கொண்டிருந்தான். அவள் தன்னை அழைத்துச் சென்ற சக்கரவாளக் கோட்டத்து வழிகள் ஒரு காலத்தில் தான் பழகிய வழிகள் என்பதை நினைத்துக் கொண்டே சென்றான் அவன். இருந்தாற்போல் இருந்து எதையோ நினைத்துக் கொண்டு கேட்பவள் போல் அவள் நடப்பதை நிறுத்திவிட்டு அவனை நோக்கித் திரும்பி, ''நீ காபாலிகர்களைப்பற்றி என்ன நினைக்கிறாய், அப்பனே?'' என்று கேட்டாள். இளங்குமரன் பதில் சொல்லாமல் நின்றான்.

''அதற்குள் நீ ஊமையாகி விட்டாயா? எனக்குப் பதில் சொல்! உன்னைத்தான் கேட்கிறேன் நான். காபாலிகர்களைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

''இப்போது உங்களுடைய குருவோடு வாதம் புரிவதற்கு என்னை அழைத்துச் செல்கிறீர்களா? நீங்களே என்னோடு வாதம் புரிய விரும்புகிறீர்களா?''

''நானும் சிறிது வாதம் புரிவதற்கு ஆசைப்படுகிறேன் என்றுதான் வைத்துக் கொள்ளேன்! காபாலிகர்களைப் பற்றி உன் கருத்து என்ன?''

''அதுதான் சொன்னேனே, 'இருண்ட சமயத்தில்தான் எங்கள் உலகம் உதயமாகிறது' என்று நீங்கள் கூறிய சொற்களே உங்களுக்கு உரிய இலட்சணம். எல்லாருடைய நினைவுகளும் - எல்லாச் சமயத்தாருடைய நினைவுகளும் மயானத்தில் போய் அழிகின்றன. ஆனால் காபாலிகர்களாகிய உங்களுடைய நினைவுகளோ மயானத்திலிருந்துதான் பிறக்கின்றன. வாழ்ந்து அழிகிறவர்களிடையே அழித்து வாழப் பார்க்கிற இலட்சியம் உங்களுடைய சமயத்துக்கு வாய்த்திருக்கிறது.''

''எங்கே இன்னொரு தரம் அதையே சொல்..''

''வாழ்ந்து அழிகிறவர்களிடையே அழித்து வாழ முயல்வது உங்கள் இலட்சியம்.''

''அந்த இலட்சியத்தை இப்போது நான் நிறைவேற்றலாம் என்று பார்க்கிறேன் அப்பனே!'' இப்படிக் கூறிய வாறே வெறி நகையின் பயங்கர ஒலி அந்தச் சக்கரவாளத்துக் காடு எங்கும் எதிரொலிக்கப் பேய்த் தோற்றமாகிய விசுவரூப மெடுத்தாற் போல அந்தக் காபாலிகை வாளை ஓங்கிக் கொண்டு ஆவேசமாக மாறி அவன் மேல் பாய்ந்தாள்.

''வாதம் புரிவதற்கு அழைத்து வந்தீர்களா? இப்படி வதம் புரிவதற்கு அழைத்து வந்தீர்களா?'' என்று சற்றே விலகி நின்று கொண்டு நிதானமாகக் கேட்டான் இளங்குமரன்.

''காபாலிகர்களாகிய எங்களுக்கு வாதமும் வதமும் இரண்டுமே ஒன்றுதான்'' என்று முன்னிலும் கடுமையான வெறியோடு அந்தப் பூதகி அவன் மேற் பாய்ந்த போது பின்னாலிருந்து கற்குன்றுகள் விழுந்தது போல இரண்டு கைகள் அவனுடைய பிடரியில் விழுந்து கழுத்தை அழுத்தி நெரிக்கத் தொடங்கின. அந்தப் பிடியைத் தாங்க முடியாமல் அவனுக்கு விழிகளும், நாக்கும் பிதுங்கின. காட்டு நரி ஊளையிடுவதைப் போல் கோரமான வேதனைக் குரல் அவன் தொண்டையிலிருந்து புறப்பட்டது.

(தொடரும்)

ஜவுளிக்கடை குமாஸ்தாவிடம் நூறு ரூபாய்க்கு ஒரு செக் எழுதிக் கொடுத்துவிட்டு டிராயரில் செக் புஸ்தகத்தை வைத்துவிட்டுக் கதை எழுத உட்கார்ந்தான் சேகர்.

அதற்குள் அவன் மனைவி பிரபா ஒரு கார்டுடன் வந்தாள்.

''யார் எழுதி யிருக்கா, பிரபா? உன் தங்கை புஷ்பியா?''

''அவள் கடிதம் வரும் என்றுதான் காலையிலிருந்து காத்திருந்தேன். தபால்காரர் கர்ம சிரத்தையாய் இந்தக் கார்டைக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறார்!''

''யார் எழுதியிருக்கா?''

''எல்லாம் உங்க அம்மாதான். கந்த தொணதொணப்பு. எங்கேயிருந்தோ ஐந்து நயாபைசா அகப்பட்டு விடுகிறது. யாராவது மூணாங் கிளாஸ் பையனை விட்டு எழுதச் சொல்லிக் கடிதாக போடறது!''

''என்ன எழுதியிருக்கா?''

''என்னவோ விரதம் எடுக்கணுமாம், விரதம்!'' என்று அலுத்துக் கொண்டாள்.

''எடுத்து விட்டுப் போகட்டுமே, பிரபா! நாம்தான் பல் தேய்க்காமல் காப்பி சாப்பிட ஆரம்பித்துவிட்டோம், பெட்காப்பி என்ற தர்பாரில். அவளாவது கிராமத்தில் இருக்கிறாள், எடுக்கட்டுமே!''

''யார் வேண்டாம் என்றார்கள்? தினமும் என்ன, மணிக்கு மணி விரதம் எடுக்கட்டும். யார் கஷ்டப் படப்போறு? ஆனால் விரதம் எடுக்கணும், பத்து அனுப்பு, இருபது ரூபாய் அனுப்பு என்று எழுதாமல் இருக்கட்டும்!''

''எவ்வளவு பணம் கேட்டிருக்கா?''

''பத்து ரூபாய்க்குக் குறையாமல்!''

''இந்த மாதம் அந்தச் 'சாஸ்ஜாப்பு' என்ற மாதப்பத்திரிகையில் மூன்றாவது வருடம் 'கொடுக்காவிட்டால் விடமாட்டேன்' என்ற என் கதைக்கு விடாப்பிடியாக எழுதிச் சன்மானம் வாங்கினேன் அல்லவா? அது வராத சன்மானம் என்று கைவிட்ட விஷயம் தானே. அது வரவில்லை என்று நினைக்க இப்ப அதை அம்மாவுக்கு அனுப்பலாமே!''

''அந்தப் பணம் இவ்வளவு நாள் இருக்கா! அதையும் பழைய புடவைகளையும் போட்டு உங்க சின்ன மச்சினனுக்கு டிபன் சாப்பிட ஒரு எவர்ஸில்வர் டிபன்பாக்ஸ் வாங்கி விட்டேன். கையிலே பணம் இல்லேன்னு எழுதி விடுங்க. கொடுத்தா வைச்சிருக்கா, உங்க அம்மா!'' என்றாள் பிரபா.





"அது நன்று யிருக்குமா, பிரபா. அந்தக் காலத்திலே அவள் என்னைப் படிக்க வைக்கப் பட்ட கஷ்டம்...!"

"எனக்கென்ன! கதையிலே வர பணத்தை யெல்லாம் உங்கம்மா பேருக்கே மணியார்டர் செய்யும்படி கதையுடன் ஆசிரியருக்கு ஒரு கடிதம் வைத்து அனுப்புங்கள். நமக்கும் வர வரக் குடும்பம் பெரிதாகிக் கொண்டு வருகிறது. அப்புறம் உங்க இஷ்டம்!"

அவள் உள்ளே போய் விட்டாள். சமையல் உள்ளே வெண்கலக் கடையில் யானை புகுந்த சத்தத்தை உண்டாக்கினள்.

மூன்று வயதுப் பெண் வல்லியின் தொடையில் கிள்ளினள். கோரோஜனையை டன் கணக்கில் சாப்பிட்ட செல்லப் பெண் அது. கேட்பானேன்! கூரை கிடுகிடுத்தது. சத்தம் அவன் காதுகள் வழியே புகுந்து அவன் உடலை நடுக்கியது.

ஜிப்பாவை மாட்டிக் கொண்டு வெளியே கிளம்பினன் சேகர்.

அவன் சர்க்கார் ஆபீஸ் ஒன்றில் குமாஸ்தா வேலை பார்க்கிறான். புதிய சம்பளத் திட்டப்படி ரூபாய் நூற்றிப்பதினெட்டு வந்தது. அது போதாவிட்டால் கூட அவன் அடிக்கடி கதைகள் எழுதிக்கணிசமான சன்மானம் வந்து கொண்டிருந்தது. அதில் ஏதோ மிச்சம் பிடித்து நானூறு ரூபாய்வரை பாங்கியில் கூடப் போட்டிருந்தான். ரேடியோவும் ரோஸ்வுட் மேஜை, நாற்காலிகளும் வாங்கப் பணம் சேர்த்தான்.

அவனுக்குக் கலியாணமாகி ஐந்து வருடமாகி விட்டது. மூன்று வயதில் ஒரு பெண்; ஆறு மாதக் கைக் குழந்தை ஒன்று.

அவன் தாய் ஊரிலேயே காவேரி ஸ்நானம் செய்து கொண்டு அங்கேயே யார் வீட்டிலாவது கலியாணங்களுக்கும் மற்ற விசேஷ நாட்களுக்கும் சமையல் செய்து வைத்து வயிறு வளர்த்து வந்தாள்.

கலியாணமாகித் தனிக் குடும்பம் போட்ட போது தாயையும் வரும்படி கூப்பிட்டான். ஆனால் அவள் இணங்கவில்லை. கிராமத்திலேயே தங்கிவிட்டாள். உழைத்துச் சாப்பிடுவதை விரும்பியவள் அவள்.

எப்பொழுதாவது சேகர் மட்டும் கிராமத்துக்குத் தகப்பனர் சிராத்தத்துக்குப் போய் விட்டு வருவான்.

வருடங்கள் ஐந்தாகி விட்டன.

அவன் பொருளாதார நிலை கொஞ்சம் திருப்திகரமாக இருந்து வந்தது.

அவனுக்குத் தன் மனைவி பிரபாவை எதிர்த்துக் கொள்ளும் தைரியம் கிடையாது. அவள் அழகு அவனை அப்படி மயக்கியது.

ஆனால் மனைவியின் தங்கை, தாயார் தகப்பனர் இவர்களுக்கு மனைவி செய்யச் சொன்னும் எல்லாவற்றையும் செய்து வந்தான்.

சற்று முன்பு நூறு ரூபாய்க்கு ஜவுளிக் கடைக்குச் 'செக்' கொடுத்தது கூடப் போன மாதம் அவள் தங்கை புஷ்பி வந்துவிட்டுப் போனபோது அவளுக்கு எடுத்துக் கொடுத்த ஜவுளி இனங்களின் பாக்கிதான்.

அவள் தங்கைக்கு நூறு ரூபாய்க்கு 'செக்' கிழித்துக் கொடுத்தவனுக்குத் தன் தாய்க்குப் பத்து ரூபாய் அனுப்ப வேண்டும் என்று அவளிடம் கண்டித்துக் கேட்க முடியவில்லை.

அவளுக்குத் தெரியாமல் ஒரு தடவை ஐந்து ரூபாய் அவன் அம்மாவுக்கு அனுப்பப் போக, அது பிறகு அவளுக்குத் தெரிந்து அவள் படுத்திய பாடு அவனுக்கு அதன் பின் மனைவிக்குத் தெரியாமல் எதையும் அனுப்ப இயலாதபடி ஆகிவிட்டது. அழகுள்ள மனைவியுடன் சண்டை போட்டுக் கொள்வதற்குக்





தருமபுரம் ஆதீனம் இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானம் கயிலை சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆடி அமாவாசையன்று மகா கைலாசக் காட்சி கண்டு இரண்டு ஆண்டுகள் பூர்த்தி பெற்றதை முன்னிட்டு, அவ் விழா தருமபுரத்தில் சமீபத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. வெள்ளி ரதத்தில் மகா கைலாசக் காட்சி திருவுருவப்பட வீதியுலா விமரிசையாக நடந்தது.



இப்பொழுது நடைபெறுகிறது
சென்னை
பிளாசா
பாரத்
மகாலட்சுமி
மற்றும்
தென்னகமெங்கும்
புரட்சி நடிகர்
எம்.ஜி.ஆர்
அளிக்கும்
அரசு பிக்சர்ஸ்
நல்லவன் வாழ்வான்
திரைக்கதை, வசனம்
அறிஞர் அண்ணா
தயாரிப்பு-டைரக்ஷன்
ப. நீலகண்டன்
இசை - T.R.பாப்பா
ஸ்டுடியோ-மெஜஸ்டிக்

கஷ்டப்பட்ட கணவன்மார்களை அவள் பேறு எவ்வளவோ தடவை சிருஷ்டித்திருக்கிறது.

''அம்மாவுக்கு அனுப்பலாமா?'' என்று கேட்கத் தயங்கினான் அவன்.

''அம்மாவுக்கு என்ன எழுதப் போகிறீர்கள்?'' என்று பிரபாவே முந்திக்கொண்டு கேட்டாள் அவனை.

''இந்தத் தடவை அனுப்பினால் என்ன பிரபா?'' என்றான் தயக்கத்துடன்.

''நான் சொல்கிறபடி எழுதுங்கள். எனக்கு உடம்பு சரியில்லாமல் மூன்று மாதங்களாகப் படுக்கையில் இருப்பதாயும் வைத்தியச் செலவு செய்யக் கூட முடியாதபடி திண்டாடுவதாயும் அதனாலேயே நல்ல வைத்தியரிடம் கூடக் காட்ட முடியவில்லை என்றும் எழுதுங்கள்.''

அவனும் ஆபீஸ் போனதும் அப்படியே எழுதினான். எழுத்தாளன் அல்லவா? உருக்கமாக ஒரு கடிதம் எழுதினான்:

அம்மாவுக்கு, சேகர் அநேக நமஸ்காரம்.

விரதத்துக்கு என்று நீ பணம் கேட்டு அதை அனுப்பாத, அனுப்பமுடியாத இந்தக் கையாலாகாத பிள்ளையை ஏன் பெற்றாய்? உன் மருமகள் மூன்று மாதமாய்ப் படுக்கை. நல்ல வைத்தியரிடம் காட்டப் பணம் இல்லாததால் தர்ம ஆஸ்பத்திரியில் காட்டுகிறேன். எதற்கும் நீ கேட்ட பணத்தை அனுப்ப முயற்சி செய்கிறேன். அனுப்ப முடியா விட்டால் இந்தப் பாவியை மன்னித்து விடம்மா.

உன் பிரியமுள்ள
சேகர்

அதன்பின் ஒரு வாரம் சென்றது.

அவன் தாயாரிடமிருந்து இருபது ரூபாயும் ஒரு கடிதமும் வந்தன.

சிரஞ்சீவி சேகருக்கு, ஆசீர்வாதம்.

உன் கடிதம் பார்த்தேன். பிரபாவுக்கு உடம்பு என்று கேட்க மனக் கஷ்டம் தாங்க முடியவில்லை. தர்ம வைத்தியம் வேண்டாம். நல்ல டாக்டரிடமே காட்டு.

உன் பணம் வந்ததும் என் கையிலுள்ள பத்து ரூபாயையும் போட்டு விரதம் எடுக்கலாம் என்றிருந்தேன். ஆனால் உன் மனைவியின் உடம்புக்கு நீ வைத்தியம் செய்யப் பணம் இல்லாமல் திண்டாடும் போது எனக்கு என்ன விரதம் வேண்டிக் கிடக்கிறது? நான் காய்ந்த மட்டை. எப்போதும் விழத் தயார். ஆனால் அவள் சிறிசு. அப்படி இல்லையல்லவா? அவள் உடம்பு தெம்பாக இருந்தால்தானே உனக்குக் குடும்பத்தில் சந்தோஷமும் நிம்மதியும் இருக்க முடியும்?

உன் கடிதத்தைப் பார்த்ததும் என் விரதம் என்ற பேச்சே எழ அவசியமில்லை. உடனடியாக அவளை நல்ல டாக்டரிடம் காட்ட வேண்டியது அவசியம்.

விரதத்துக்காக நான் வைத்திருந்த பத்து ரூபாயையும் கிட்டாவய்யர் வீட்டில் முன் பணமாய்ப் பத்து ரூபாயும் வாங்கி இருபது ரூபாய் அனுப்பியுள்ளேன். உடனே பெரிய டாக்டரிடம் காட்டு. அவள் உடம்பு குணமானால் எனக்கு ஆயிரம் விரதம் எடுத்துக் கொண்ட மாதிரி.

மந்திரபுரீசுவர சுவாமிக்கு அவள் பெயரால் அர்ச்சனை செய்து விபூதி குங்குமம் அனுப்பியிருக்கிறேன்.

உன் பிரியமுள்ள
அம்மா.

பிரபாவும் சேகரும் இதைப் படித்ததும் வாயடைத்துப் போனார்கள். அவள் கடிதம் அவனை உருக்கியது.

அதையே வைத்து அவன் ஒரு சிறுகதை எழுதிக் கணிசமான சன்மானம் கிடைத்தது ஒரு வாரத்தில்.

சன்மானத்தை அவன் வாங்கியபோது பிரபாவே சேகரிடம் ''இதை இப்படியே உங்கள் அம்மாவுக்கு அனுப்பிவிடுங்கள். எவ்வளவு விரதங்கள் எடுக்கணுமோ அவ்வளவு எடுக்கட்டும்!'' என்றாள்.

அதை அப்படியே மணியார்டர் செய்யப் புறப்பட்டான் அவன். பாதி வழியில் தந்திப் பியூன் ஒரு தந்தியை அவனிடம் நீட்டினான்.

அவன் தாய் இறந்து விட்டதாகப் பட்டாமணியம் தந்தி அடித்திருந்தார்.

ஓடினான் வீட்டை நோக்கி.

வாசலில் நின்ற மனைவி பிரபா, ''அம்மாவுக்கு விரதத்துக்குப் பணம் அனுப்பி விட்டீர்களா?'' என்று கேட்டாள்.

''அம்மா விரதத்துக்குக் கேட்டபோது அனுப்ப மனம் வரவில்லை. இப்போது அனுப்ப மனம் வந்தது. ஆனால் அது விரதத்துக்குப் பயன் படாது; அவள் கருமத்துக்குத்தான், அதுவும் எனக்குத்தான் பயன்படவிருக்கிறது!'' என்று அவன் மனமுடைந்து சொன்னான்.




# ஹோல்டான்! ஹோல்டான்!

ரவீந்த்ரன்

இருபத்திரண்டாம் நம்பர் பஸ், ஸ்டாண்டில் நின்று கொண்டிருப்பதைக் கண்ணுற்றதும், அந்த வண்டியில் செல்ல வேண்டியவர்கள் எங்கிருந்து அதைக் கண்டார்களோ அங்கு பிடித்த ஓட்டத்தை வண்டியில் ஏறிய பிறகே நிறுத்தினர். பாவம்! அவர்களுக்கு ஏதோ காணாததைக் கண்டு விட்ட மகிழ்ச்சி. வண்டியில் உட்கார்ந்திருந்த கண்டக்டர் கண்ணாயிரம், "ஏம்பா இப்படி கண்ணுமண்ணு தெரியாமல் ஓடியாறீங்க? அப்படியே இந்த பஸ் போயிட்டுதுன்னாகூட அடுத்த வண்டியிலே வர்ரது...." என்று அவர்களுக்கு உபதேசம் செய்து விட்டுச் சாவதானமாகக் கீழே இறங்கிப் போகக் கிளம்பினார்.

'கஞ்சி வருகுதப்பா!' என்று சொன்னாலே உடனே 'எங்கு வருகுதப்பா?' என்று ஏழைகள் ஏங்குவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் சென்னை மக்களுக்கு 'பஸ் வருதப்பா' என்று சொன்னால் போதும், உடனே 'எங்கு வருதப்பா' என்று கேட்டுக் கொண்டே அவர்கள் பாய்ந்தோடுவது வழக்கமாகி விட்டது.

வண்டியிலிருந்த பிரயாணிகளில் ஒருவர் "எப்ப ஸார், இந்த வண்டி கிளம்பும்?" என்று கண்ணியமுடன் 'ஸார்' போட்டுக் கண்ணாயிரத்தைக் கேட்டார்.

அவர் அன்று மாலை வீட்டுக்குப் போய்க் குடும்ப சகிதமாகச் சினிமாவுக்குப் போகத் திட்டம். ஆனால் இப்பொழுது மணி ஓடுவதைப் பார்த்தால் அந்தத் திட்டம் நிறைவேறாது போலிருக்கே? பிறகு வீட்டிலே அர்ச்சனை மாரியலவா விழும்?

பதிலுக்குக் கண்ணாயிரம் கேட்டார்: "மணி இப்ப என்ன?"

"மூணு அடிச்சு அஞ்சு நிமிஷம்" என்று கூறினார் அந்த மனிதர்.

"மூணே முக்காலுக்குத்தான் இந்த வண்டி கிளம்பும்...." என்று சொல்லி விட்டு இறங்கிப் போய்விட்டார் கண்ணாயிரம்.

பிரயாணிகள் வெய்யிலில் நிறுத்தப்பட்டிருந்த அந்த வண்டியில் வெந்து போய்க் கொண்டிருந்தனர்.

சரியாக மணி நாலடித்து விட்டது. மூன்றே முக்காலுக்குப் புறப்பட வேண்டிய வண்டி நாலு மணியாகியும் புறப்படாதது வண்டியிலிருந்தவர்களுக்குக் கவலையை உண்டுபண்ணவில்லை. அதுதான் தினசரிக் காட்சிகளில் ஒன்றாயிற்றே? கண்ணாயிரமும், டிரைவரும் வந்து வண்டியிலேறி வண்டியைக் கிளப்பினர். தவறு......தவறு அவர்களுடன் அந்தப் பஸ்ஸிலிருந்த பிரயாணிகளும் சேர்ந்து தான் கிளப்பினர்.

வண்டி கிளம்பி விட்ட உற்சாகத்தில் மடமடவென்று எல்லாப் பிரயாணிகளும் உள்ளே ஏறினர். பஸ்ஸில் உட்கார்ந்திருந்தவர்கள் துரதிருஷ்ட வசமாய் நிற்கும்படியாயிற்று. இத்தனை நேரம் நின்றிருந்தவர்கள், வேகமாக உள்ளே ஏறியதால் அதிர்ஷ்ட வசமாய் உட்கார்ந்து கொண்டனர்.

அப்படி உட்கார்ந்து கொண்டவர்களில் ஒருவர் திடீரென்று எழுந்து கொண்டார். சுற்று முற்றும் ஒருமுறை பார்த்துக் கொண்டார். உடனே "ஹோல்டான்....ஹோல்டான்" என்று கத்திக்கொண்டே கீழே இறங்கினார். அவர் இறங்க வேண்டிய இடம் அதுதான். அவ்வளவு தூரம் வரைக்கும் அவர் மற்றவர்களுடன் பஸ்ஸைத் தள்ளிக் கொண்டு வந்திருக்கிறார்! கண்ணாயிரம் மிகவும் நல்ல மனிதர். டிக்கட் பணம் வசூலிக்காமலேயே அவரை விட்டு விட்டார். அவருக்கு அன்று ஏழு பைசா லாபம் அல்லவா? அந்தச் சந்தோஷத்துக்குத்தான் ஈடு இணை ஏது?



கரத்திற்கும்
உறுதிக்கும்
நிகரற்றது

# ஹத்திபாயின்

## ஸ்டெயின் லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்













எப்பொழுதும் பிரகாசத்துடன், நீடித்து உழைப்பவை

**ஹத்திபாய் துளஸிதாஸ் & சன்ஸ்**

122. கன்ஸராசால்.., பம்பாய்-2.

# விரைவான, நிச்சயமான கெடுதலில்லாத

இருமலுக்கு
வீட்டிலேயே குணம் அளிப்பது




*Alembic*

# க்ளைகோடின்
## டெர்ப் - வசாகா

களைப்பும், வெறுப்பூட்டும் வரட்டு இருமலுக்கு
வீட்டிலேயே கெடுதலில்லாத நிச்சய குணமளிக்கிறது.

AAQ.278A TAM

# திருநெல்வேலி உறை செல்வர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஒரு கவிஞன், கவிஞன் என்றால்தான் வறுமையும் உடன்பிறந்து வளருமே. அந்த வறுமை காரணமாக வாடுகிறான், வருந்துகிறான். கவிஞனோ அந்தத் திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலிக்காரன். நல்ல தெய்வ பக்தி உடையவன். ஒவ்வொரு நாளும் அவன் கோயில் சென்று இறைவனை வழிபட மறவாதவன். கோயிலுக்குச் செல்லும் பொழுதெல்லாம் வேணுவனநாதர், நெல்லையப்பரிடம் தன் குறைகளைச் சொல்கிறான். தன் வறுமையை நீக்க வேண்டுகிறான். ஆனால் நெல்லையப்பரோ இவனது குறைகளைத் தீர்க்கிறவராகக் காணோம். ஏன்? காது கொடுத்துத்தான் கேட்கிறாரா என்பதே சந்தேகம். இப்படிக் கழிகிறது பல நாட்கள். இந்தக் கவிஞன் ஒருநாள் அன்னை காந்திமதியின் சந்நிதிக்கு வருகிறான். அம்மன் கோயில் வாயில் வழி நுழைந்தவன் ஊஞ்சல் மண்டபம், மணி மண்டபம், நடு மண்டபம் எல்லாம் கடந்து கருவறைப்பக்கமே வந்து சேருகிறான். அங்கே நிற்கும் அன்னையைப் பார்க்கிறான். அவளோ, தலையில் வைர மணிமுடி, ராக்கடி எல்லாம் அணிந்திருக்கிறாள். மூக்குப் பொட்டு, மூக்குத்தி, புல்லாக்கு எல்லாம் அழகு செய்கின்றன; மார்பில் நவமணி வடம் புரள்கிறது: அடிகளில் மணிச்சிலம்பு ஒலிக்கிறது. வலக்கையை உயர்த்தி அதில் கிளியுடன் கூடிய செண்டு ஒன்று ஏந்தி, இடக்கையைத் தாழ்த்தி நிற்கும் அந்த வடிவழகியை ஒரு புது மணப்பெண்ணாகவே காண்கிறான் கவிஞன். அப்போது தோன்றுகிறது கவிஞனுக்கு, ஏன், இந்த அன்னையின் மூலமாகவே தனது விண்ணப்பத்தை அந்த வேணுவனநாதரிடம் சமர்ப்பிக்கலாகாது என்று. அப்படி அவன் தனக்காகத் தன் கணவரிடம் பரிந்து பேச நல்ல வாய்ப்பு எப்போது கிடைக்கும் என்பதையுமே அறிகிறான். இந்த எண்ணத்திலே உருவாகிறது பாட்டு:

ஆம் முத்தப் பந்தரில் மெல்லணை
மீது உன் அருகிருந்து
'நீமுத்தம் தா'என்று அவர் கொஞ்சும்
வேளையில், நித்தநித்தம்
வெம்முத்த ரோடுஎன் குறைகள்
எல்லாம், மெல்லமெல்லச் சொன்னால்
வாய்முத்தம் சிந்தி விடுமோ?
நெல்வேலி வடிவு அன்னையே!

என்று அன்னையிடமே கேட்கிறான். இவ்வளவு ஆத்திரத்தோடு கவிஞன் கேட்டபின் அன்னை சும்மா இருப்பாளா? சிபாரிசு பலமாகத்தான் செய்திருப்பாள். நெல்லையப்பரும் மனைவி உத்தரவுக்குக் கீழ்ப்படியாமலா இருந்திருப்பார்? கவிஞனுக்கு விடிவு காலமும் காலதாமதம் இல்லாமலே வந்திருக்கும். உண்மையிலேயே இப்படியே நடந்தது என்பது அல்ல பொருள். இறைவனையும் இறைவியையும் மனம் ஒத்த காதலர்களாகக் கற்பனை பண்ணி இப்படிக் கவிஞன் பாடுவதிலே ஒரு சுவை கண்டிருக்கிறான். இந்த இறைவனும் நெல்லையப்பரும் இறைவியாம் காந்திமதி அம்மையும் கோயில் கொண்டிருக்கும் தலம் தான் திருநெல்வேலி. அத்தலத்துக்கே செல்கின்றோம் நாம் இன்று.

தென் பாண்டி நாட்டின் தென் பகுதியிலே உள்ள ஒரு பழம் பதி. 'பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை' நதிக்கரையிலே உள்ள ஒரு நகரம். திருநெல்வேலி ஜங்ஷனில் இறங்கினால் மேற்கு நோக்கி ஒன்றரை மைல் போக வேணும். திருநெல்வேலி டவுன் ஸ்டேஷனில் இறங்கினால் வடக்கு நோக்கி நாலு பர்லாங்கு வரவேணும். அப்படி வந்தால் கோயில் வாயில் வந்து சேரலாம். இந்தக் கோயிலிலே ஒரு சம்பிரதாயம். கோயிலுக்கு வருபவர் எல்லாம் முதல் முதல் சென்று தரிசிப்பது காந்திமதி அம்மையையே. ஆம்! மதுரையில் மலயத்துவஜன் மகளான மீனாட்சிக்கு எத்தனை பிராதான்யம் அந்தக் கோயிலில் உண்டோ, அது இங்கு காந்திமதிக்கும் உண்டு. நெல்வேலி முழுதும் வீட்டுக்கு ஒரு காந்திமதி அல்லது காந்திமதிநாதன் இருப்பார்.

காந்திமதியம்மன் கோயில் வாயில் வழியாகவே நாமும் நுழையலாம். உள்ளே சென்றதும் சந்நிதிக்கு எதிரில் உள்ள ஊஞ்சல் மண்டபத்தைக் காணலாம். அதற்கு வடபுறமே பொற்றாமரைக் குளம். மதுரையைப்போல் பெரிதல்ல. ஆயினும் அழகாக இருக்கும். அங்கிருந்தே கோபுர தரிசனம் செய்யலாம். அதன்பின் மகாமண்டபம் எல்லாம் கடந்து அர்த்த மண்டபம் வந்து அங்கிருந்து காந்திமதியம்மையைக் கண்டு வணங்கலாம். முன்னரே கூறியது போல் அம்மை நின்ற திருக்கோலத்தில் புது மணப்பெண்ணாகவே காட்சி தருவாள். இந்தக் காந்திமதியம்மையின் திருக்கல்யாண மகோத்



பொற்றாமரை - கோபுரம்

சவம் கண்கொள்ளாக் காட்சி. கதை நமக்குத் தெரிந்த கதைதான். அன்று கைலையில் இறைவன் இமவான் மகளான உமையைத் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானிக்கிறான். அந்தத் திருமணக் கோலங் காண மக்கள் தேவர் நாகர் எல்லோருமே கைலைக்குச் செல்கிறார்கள். அதனால் பாரம் தாங்க மாட்டாமல் தென் கோடு உயர்ந்து வடகோடு தாழ்கிறது. நாட்டைச் சமன் செய்ய இறைவன் அந்தக் குள்ள அகத்தியரையே தேர்ந்தெடுக்கிறான். அவரைத் தென்திசை செல்ல வேண்டுகிறான். அவரோ, நான் மட்டும் 'திருமணக் கோலம் காணவேண்டாமோ?' என்று சிணுங்குகிறார். அவரிடம் இறைவன், தாமே தென் திசை வந்து திருமணக் கோலத்தில் காட்சி கொடுப்பதாக வாக்களிக்கிறார். அதன் பின்னேதான் அகத்தியர் தென் திசை வருகிறார். பொதிகை வந்து தங்குகிறார். தென் திசையும் தாழ்ந்து நாடு சமநிலை எய்துகிறது. மணம் முடித்த புதிய தம்பதிகளாம் அந்த அமர காதலர்களிடையே ஒரு விளையாட்டு. அன்னை, அத்தனின் கண்களைப் பொத்தி 'யார் பொத்தியது' என்று கேட்கிறாள். அன்னையின் கண்கள் பொத்தப் பெற்ற காரணத்தால் அகில உலகமுமே இருளில் ஆழ்ந்து விடுகிறது. இந்தப் பழி அகல அன்னை கம்பை நதிக் கரையில் வந்து தவம் புரிகிறாள். அவள் தவத்துக்கு இரங்கி இறைவன் அங்கு எழுந்தருளிக் காட்சி தருகிறான். மணமும் செய்து கொண்டு அந்தத் திருமணக் கோலத்திலேயே அகத்தியர் முன்பு வந்து நின்று விடுகிறான். ஆனால் அந்தத் திருமண விழாவைத் திருநெல்வேலி அன்பர்கள்-அதிலும் பெண் மக்கள்-எப்படிக் கொண்டாடுகிறார்கள் தெரியுமா? அதைச் சொல்கிறார் ஒரு கவிஞர்.:

**வேணு வனத்து இறைவர் புது**
**மணம் விரும்பி, விளையாட்டாய்**
**காணும் உமைப்பெயர் பொருந்தும்**
**காந்திமதிதனைக் கடிந்து காட்டுக்கு ஓட்டி,**
**தானும் அவள்பின் சென்று நயம் படித்து**
**பலர் சிரிக்க நலிவே உற்றால்**
**வாள்நுதலும் அவர்பின்னே வருவதுவும்**
**வியப்பாமோ? வசை ஒன்று இன்றி!**

கோபித்துக் கொண்டு தாய் வீடு சென்ற தலைவியின் பின் சென்று, கெஞ்சிக் கூத்தாடி அவளைத் தம் வீட்டுக்குத் திரும்பவும் அழைத்து வருகிறார் நெல்லையப்பர் என்பது பாமரர் காணும் கதை. ஆம், இந்தக் கதையில்கூடப் பெண்மையின் வெற்றியே மேலோங்கி நிற்கிறது. இப்படித்தான் காந்தியாம் வடிவன்னை முக்கியத்துவம் பெற்று விடுகிறாள். அவள் கருவறையில் கையில் செண்டேந்திக் கொண்டு நின்றால், செப்புச் சிலை வடிவில் ஞான முத்திரையோடு நிற்பாள். உயிர்களுக்கெல்லாம் அருள் புரியும் கோலம் அல்லவா இந்த வடிவன்னையின் வடிவம்!



காந்திமதியம்மை

இந்த வடிவன்னையை மணந்தவரே நெல்லையப்பர் என்னும் வேணுவனநாதர். இவரது சந்நிதி அம்மையின் இடப் பக்கத்திலே. இவ்விரண்டு கோயில்களும் தனித் தனியே கட்டப்பட்டிருக்க வேணும். பின்னர்தான் இரண்டு கோயில்களையும் இணைத்து ஒரு மண்டபம், பொற்றாமரைக்கு மேல் பக்கம் கட்டியிருக்கிறார்கள். இதனையே சங்கிலி மண்டபம் என்கிறார்கள். இம்மண்டபத்தைக் கட்டியவன் ஒரு தொண்டைமான் என்று அம்மண்டபத்தில் உள்ள கல்வெட்டு கூறுகிறது. இந்த மண்டபம், பிராகாரம் எல்லாம் கடந்தே நெல்லையப்பர் சந்நிதிக்கு வரவேணும். இவர் நெல்லையப்பர் என்றும் வேணுவனநாதர் என்றும் ஏன் பெயர் பெற்றார் என்பதற்கு இரண்டு நல்ல வரலாறுகள் உண்டு. இந்தக் கோயில் இன்றிருக்கும் இடம் அந்த நாளில் ஒரே மூங்கில் காடாக இருந்திருக்கிறது. ராமக்கோன் என்று ஒருவன், அவன் தினசரி தன்னுடைய மாட்டுப் பட்டிக்குச் சென்று பால் கறந்து அந்தப் பால் நிறைந்த குடத்துடன் தன் இல்லத்துக்குத் திரும்புவான். அப்படி வரும் போது ஒவ்வொரு நாளும் ஒருமூங்கில் புதரண்டை கால் தடுக்கிப் பால் குடம் விழுந்து பால் முழுதும் சிந்தி விடுகிறது. சில நாள் இப்படி நடக்கவே மறு நாள் கோடரியுடன் வந்து அந்த மூங்கில் புதரை வெட்டி அகற்ற முனைந்திருக்கிறான். அப்படி வெட்டும் போது வெளிப்பட்டவரே வேணுவனநாதர். அவரை முழுதும் கண்ட ராமக்கோன் (ராம பாண்டிய ராஜா என்று அழைக்கப்படுகிறார் பின்பு) வேண்டியபடியே வளர்ந்திருக்கிறார் இவர். இந்த சுயம்புமூர்த்தியை இன்னும், வேண்ட வளர்ந்த நாயகர் என்றே அழைக்கிறார்கள். இவரே கருவறையுள் வெட்டப்பட்ட தலையோடு இருக்கிறார். கோயிலின் முதல் பிராகாரத்திலே ஒரு பள்ளமான இடத்திலே மூல லிங்கர் வேறே இருக்கிறார். இந்த வேணுவனநாதர் எப்படி நெல்வேலி நாதர் ஆனார்? வேத சர்மா என்று

# ரெக்ஸ்

**ஜெல்லி**



## இன்பமான காட்சி...மிகுந்தசுவை...மிகவும்நல்லது!

இது சுவை மிகுந்தது. பழங்களின் மணம் கொண்டது. எளிதில் தயாரிக்கக்கூடிய ஒரு பண்டம். ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்களை வெந்நீரில் கலந்தால் போதும். பிறகு போதுமான அளவு குளிர்ந்த ஜலம் அதோடு சேர்த்து அந்தக் கலவையை ஒரு பைண்டுக்கு, (அதாவது 20 அவுன்ஸ்) சமமாக ஆக்கிக்கொள்ளுங்கள். அதை அச்சியில் ஊற்றி, ஐஸின் மேல் ஜெல்லியை உறைய வையுங்கள்.

அது குடும்பத்தார் விரும்பும் போஷகமளிக்கும் லேசான பண்டம். வியாதியிலிருந்து சுகமடைந்தவருக்கும் கூட நல்லது.

ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்கள் 6 சுவைகளில் கிடைக்கின்றன. ராஸ்பெரி, ஸ்ட்ருபெரி, லெமன், பைனாபிள், ஆரஞ்சு, செர்ரி.






**கார்ன் பிராடக்ட்ஸ கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**

தென் இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி லிமிடெட்

# நன்றாக வாரிவிடப்பட்ட ஆரோக்கியமான கூந்தல்



எப்பொழுதுமே
கண்ணைக்
கவரும்!




கால்கேட் ஹேர் டானிக்கில் லெனோலின் என்ற இயற்கையான கூந்தல் எண்ணெய்களை ஒத்த எண்ணெய் மிகச்சிறந்த முறையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. பிரதி தினமும் கால்கேட் ஹேர் டானிக்கை உங்கள் தலையில் தடவி 3 நிமிடங்களுக்கு வழக்கமாகத் தேய்த்தால் உங்கள் கூந்தல் ஆரோக்கியமாகவும், அடர்த்தியாகவும் வளருவதுடன் நாள் முழுவதும் நேர்த்தியாகப் படிந்திருக்கவும் உதவுகிறது!

லெனோலின் கலந்த **கால்கேட்**
ஹேர் டானிக் உபயோகியுங்கள்!

ஆடவர்கள் விரும்புவது!

CHT. 6-4

---

## பல் சிதைவுகளையும் வாய் நாற்றத்தையும் ஈறு உபாதைகளையும் நிறுத்துங்கள்

பளிச்சென்று ஒளிவீசும் வெண்மையும்
ஆரோக்கியமுமான பல் வரிசைகளை
அடைய வேண்டுமானால்

## போர்ஹான்ஸ்

பற்பசையை உபயோகியுங்கள்




ஈறுகளின் உறுதிக்காக என்றே டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் கண்டுபிடித்து அளிக்கும் விசேஷத் துவர்ப்புப் பொருள் கலந்துள்ள பற்பசை இது ஒன்றுதான்.

Geoffrey Manners & Co. Ltd.

TAM. 5.29

ஓர் அர்ச்சகர், கோயில் பூசைக்கு வேண்டிய நெல்லை எடுத்துத் தம் வீட்டின் முற்றத்தில் வெயிலில் உலர்த்தி விட்டு ஆற்றுக்குக் குளிக்கச் சென்றிருக்கிறார். அந்த நேரத்தில் பெரு மழை பெய்திருக்கிறது. உலர்த்திய நெல் எல்லாவற்றையும் வெள்ளம் வாரிக் கொண்டு போய்விடுமே என்னும் ஆதங்கத்தோடு அர்ச்சகர் வீடு நோக்கி ஓடி வருகிறார். அர்ச்சகரின் அன்பினையும் ஆதங்கத்தையும் அறிந்த இறைவன், அந்த நெல் காய்ந்த இடத்தில் ஒரு துளி மழையும் விழாமல் காத்திருக்கிறார். அப்படி அவர் வேலி போல் நின்று காத்த காரணமாக நெல்வேலி நாதன் ஆகியிருக்கிறார். ஆம், இன்று வேலியிட்டது போல் நெல் வயல்கள் ஊரைச் சுற்றி நாலு பக்கங்களும் பரவி நிற்கிறதைப் பார்த்தவர்கள் இந்த ஊருக்கு நெல்வேலி என்ற பெயர் பொருத்தமே என்று ஒப்புக் கொள்வார்கள்.

இத்தலத்துக்கு ஞானசம்பந்தர் வந்து பாடிப் பரவியிருக்கிறார்.

மதுரையைத் தலைநகராகக் கொண்ட அந்த நின்ற சீர்நெடுமாறனே இக் கோயில் கட்டினன் என்பது வரலாறு. இவனையே 'நிறைகொண்ட சிந்தையன் நெல்வேலி வென்ற சீர்நெடுமாறன்' என்று சமய குரவரில் ஒருவரான சுந்தரர் திருத் தொண்டத் தொகையில் பாடியிருக்கிறார். நெடுமாறனே முதலில் சமணனாக இருந்து பின்னர் சம்பந்தரால் சைவனாக்கப்பட்டவன் என்பது பிரசித்தம். இவனது காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டு. இவனுக்குப் பின் வந்த பாண்டியர்கள், நாயக்க மன்னர்கள் எல்லாம் கோயிலை விரிவாக்கி யிருக்கிறார்கள். கி. பி. 950-ல் இருந்து அரசாண்ட வீரபாண்டியன் சோழர்களை வென்ற வரலாற்றைக் கூறுகிறது சில கல்வெட்டுக்கள். பதின்மூன்று பதினான்காம் நூற்றாண்டுகளில் இருந்த மாறவர்மன் சுந்தர பாண்டியன், மாறவர்ம குலசேகர தேவன் முதலியவர்களது சாஸனங்கள் பல கிடைக்கின்றன இக்கோயிலில். இக்கல்வெட்டுகளில் இறைவனைத் திருநெல்வேலி உடையார் என்றும் இறைவியைக் காமக் கோட்டமுடைய நாச்சியார் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. நாயக்க மன்னர்களோ திருநெல்வேலியையே தலைநகராகக் கொண்டு கோயிலைப் புதுப்பிப்பதில், மண்டபங்கள் கட்டுவதில் எல்லாம் மிகுந்த அக்கறை காட்டியிருக்கிறார்கள். இப்படிப் பாண்டியர், நாயக்கர்களோடு, மகம்மதிய பக்தர் ஒருவருமே சேர்ந்து கொள்கிறார். முகம்மது அலியின் தானபதி அன்வர்டிகான் என்பவரது மனைவியின் தீராத நோயைத் தீர்த்திருக்கிறார் இந்த நெல்லையப்பர். அந்த ஞாபகார்த்தமாக அன்வர்டிகான் ஒரு லிங்கப் பிரதிஷ்டை செய்திருக்கிறான். அன்வர்டிகானால் பிரதிஷ்டை செய்யப்பட்டவர் இன்று நல்ல தமிழில் அனவரத நாதனாகவே விளங்குகிறார். கோயிலின் தென் மேற்கு மூலையில்.

இந்த நெல்லையப்பர் கோயில் ஐந்து கோபுரங்களோடு விளங்கும் ஒரு பெரிய கோயில். ஊருக்கு நடுவில் 850 அடி நீளமும் 756 அடி அகலமும் கொண்ட ஒரு விரிந்த இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. இறைவன் சந்நிதி கோபுரத்தை விட, இறைவி சந்நிதிக் கோபுரமே அழகு வாய்ந்தது. கோயிலுள் இருக்கும் பொற்றாமரைக் கரையில் நின்று பார்த்தால் அதன் காம்பீர்யம் தெரியும். இக்கோயிலின் சிறப்புச் சிறப்புக்கள் எல்லாம் பிரசித்தம். நாயக்கர் காலச் சிலா வடிவங்கள் அனந்தம். மகா மண்டபத்திலே வீரபத்திரன், அருச்சுனன், கர்ணன் முதலியோர் சந்நிதி வாயிலிலேயே அணி செய்கின்றனர். ஆண்மைக்கு எடுத்துக் காட்டாக வீரபத்திரன் சிலை அமைந்திருக்கிறது. பெண்மைக்கு எடுத்துக்காட்டாகக் குழந்தையை ஏந்தி நிற்கும் தாயொருத்தி ஒரு தூணை அலங்கரிக்கிறாள். இக்கோயிலில் உள்ள கற்சிலைகளைவிடச் செப்புச்சிலைகள் மிக மிக அழகானவை. இங்குள்ள நடராஜரும் சிவகாமியும் உருவிலே பெரியவர்கள். ஏன்? திருவிலேயும் பெரியவர்கள்தான். அவர்கள் இருக்குமிடமே பெரிய சபை. கிட்டத்தட்ட ஆறு அடி உயரத்திலே நடராஜர் என்றால் ஐந்து அடி உயரத்திலே சிவகாமி. இருவரும் இருக்க வேண்டியது தலத்துக்கே சிறப்பான தாமிர சபையில். ஆனால் எடுக்க வைக்க இருக்கும் சிரமம் கருதித் தனிக்கோயிலிலே மூலமூர்த்திகளாகவே இவர்கள் செப்புச் சிலை வடிவில் இருக்கிறார்கள். விரித்த செஞ்சடையோடு ஆடவில்லை இந்த நடராஜர். பாண்டிய மன்னர்கள் வடித்த நடராஜர் சிலா வடிவங்கள் எல்லாவற்றிலுமே கட்டி முடித்த சடைதான். இன்னும் ஓர் அதிசயம் இக்கோயிலிலே. வேணுவனநாதனின் கருவறையை அடுத்த வட பக்கத்திலே நெல்லை கோவிந்தர் நன்முகக் காலை நீட்டிப் படுத்திருக்கிறார். அவர் பக்கத்திலே கரகம் ஏந்திய கையராய் மகாவிஷ்ணு நின்று கொண்டிருக்கிறார். தங்கையை மணம் முடித்துக் கொடுக்கும்போது தாரை வார்த்துக் கொடுக்க வந்த அவசரம் போலும். நல்ல அழகான வடிவம், இந்த நெல்லை கோவிந்தரின் செப்புச் சிலை. இன்னும் ஆறுமுகனுக்கு ஒரு பெரிய சந்நிதி. அவனைச் சுற்றி வந்து ஆறுமுகத்தையுமே கண்டு களிக்க வசதி செய்திருக்கிறார்கள் நிர்வாகிகள்.

புராணப் பிரசித்தியும் சரித்திரப் பிரசித்தியும் உடைய இக்கோயில் நல்ல இலக்கியப் பிரசித்தியும் உடையது. தலபுராணம் ஒன்று இருக்கிறது. அழகிய சொக்கநாதப்பிள்ளை பாடிய காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ் படிக்கப் படிக்க இன்பம் தருவது. நெல்லை மும்மணிக் கோவை, நெல்லை வருக்கக் கோவை, நெல்லையந்தாதி என்ற இலக்கியங்கள் பெற்றது. நெல்லையப்பர் கோயிலில், காந்திமதியம்மை சந்நிதி வழியே நுழைந்தோம். திரும்பும்போதும் அவள் சந்நிதி சென்று வணங்கித் திரும்பலாம்.

ஏர்கொண்ட நெல்லைநகர் இடம்கொண்டு
    வலங்கொண்டு அங்கு இறைஞ்சுவோர்கள்
சீர்கொண்ட தன்உருவும் பரன்உருவும்
    அருள் செய்து நாளும்
வேர்கொண்டு வளர்ந்தோங்கும்
    வேய்சன்ற முத்தைமிக விரும்பிப்பூணும்
வார்கொண்ட களபமுலை வடிவுடைய
    நாயகிதாள் வணங்கி வாழ்வாம்.

என்ற பாடலைப் பாடிக் கொண்டே வாழலாம் தானே! அப்படியே வாழ்கிற நான் ஒரு திருநெல்வேலிக்காரன் என்பதில் எப்போதுமே கர்வம் கொள்கிறவன் ஆயிற்றே!




உச்சி வெயில். அவள் நடுக்கூடத்தில் படுத்திருந்தாள். வாசற்புறம் மூங்கில் கவான் மேல் படர்ந்த கொடியின் இலை சந்துகளிலும் அங்கிருந்து நேரே-அதுதான் மாம்பலம் வீடுகளுக்கே ஓர் அந்தரங்கம், தனிமை இடையாதே. ரயில் வண்டி மாதிரிதானே - கொல்லைப்புறத்தில் யானைக் காதுகள் போல் ஆடும் வாழையிலைகளின் பச்சையிலும் கானல் கனகனத்தது.

கொல்லை ரேழியில் இரண்டு அம்மாக்களும் காலை நீட்டி விட்டார்கள். அங்கு வாழை வழி தென்னை வழி வடிகட்டி வரும் தென்றல் 'ஜில்'லாகி மூடிய இமைகளின் உட்புறத்தின் எரிச்சலையும் நெற்றி வேர்வையையும் ஒற்றி எடுத்தது.

மாதம் முதிர முதிர, தூக்கம் அறவே கெட்டுப் போச்சு. இரவு முழுதும் படுக்கையில் புரண்டு புரண்டு விடி நேரத்துக்கு மிளகாயைத் தீற்றினாற்போல் இந்தக் கண்ணெரிச்சல்தான் மிச்சம். பெற்றவள் என்னதான் தனக்கு வாகாய்ச் சமைத்து உழைத்தாலும், பக்கத்தில் இருக்கையில், ஓர் எச்சிலாவது இடாமல், தேய்த்த பாத்திரங்களைக் கழுவி எடுத்து, வடித்து, அடுக்காமல் இருக்க முடியுமா?

''உடம்பை நன்றாய் வளைத்துக் குனிந்து நிமிரு. மாமியார் சொல்றது இப்போ வேம்பாக இருந்தாலும் இடுப்புவலி எடுக்கறப்போ தெரியும் நல்லதுக்குத்தான் சொன்னேன்னு மனசு ஒரு தரமேனும் நினைக்காமல் போகாது. நினைக்காவிட்டால் அது மனசுமில்லே.''

ஐயோ, இந்தப் பெரியவர்களின் பெரிய தனமே! சிங்காரச் சொல்லே!

''ஏற்கெனவே பட்டது போதும், இந்தத் தடவையும் கிராமத்தில் மருத்துவச்சியிடம் மாட்டிக் கொள்ள வேண்டாம். பிரசவம் இங்கேயே நடக்கட்டும்'' என்று தனக்குத் துணைக்கும் தங்களுக்கு வேலைக்கும் பங்கமில்லாமல், அம்மாவை இங்கு வரவழைத்து விட்டார்கள்.

ஆனால் யார் வந்தால் என்ன? யார் ஆதரவிலும் ஆறுதல் காணும் நிலையை அவள் உதரம் கடந்தாகி விட்டது. அதன் உலகத்துள் அது அவளை விழுங்கிக் கொண்டிருந்தது. நாள் ஆக ஆகப் பெரிதாகிக் கொண்டே வரும் வயிற்றின் கனத்தின் கீழ் அமிழ்ந்து கொண்டேயிருந்தாள். மற்றெது பற்றியும் அக்கறையிழந்தாள்.

இல்லாவிடில், அவளால் ஒரு நிமிஷம் படுத்த இடத்தில் இப்படிக் கிழித்த நாராய்க் கிடக்க முடியுமா? எதையேனும் தட்டிப் பெருக்கி, எடுத்து, அடுக்கிக் கொண்டிருக்க மாட்டாளா?

''சும்மா துடைச்சிண்டே யிருந்தால், துடைச்சிண்டே போயிடும். துடைக்காதே. உன் சுத்தத்துக்கும் ஒரு அத்து உண்டு'' என்று மாமியார் எரிந்து விழுவார்.

''நீ கறுப்பு நாயை வெள்ளை நாயாக்கச் செலவழிக்கும் புளிக்கும் சோப்புக்கும் ஒரு புளியந்தோப்பும் பாக்டரியும்தான் கட்டுப்படியாகும். ஆனால் உன் சுத்தத்துக்கு ஈடு கொடுக்கும் அந்தஸ்து எனக்கு இல்லையே!'' என்று அவள் கணவன் கேலி செய்வான். யார் என்ன வேணுமானாலும் சொல்லிக் கொண்டு போகட்டும் என்று இருந்தவளுக்கு, இப்போது எது எப்படி வேணுமானாலும் போகட்டும் என்ற நிலை வந்து விட்டது.

அவள் இப்போது வேண்டியதெல்லாம், இமை கொட்டினால் போதும், தன்னை மறந்த நித்திரையில் ஒரு நிமிடமேனும் தன்னை மறந்தால் அதுவே சுகம்.

பஞ்சணையில் தூக்கமில்லை. தூக்கமேதான் பஞ்சணை. மல்லிகைக் குவியலில் புதைவது போன்ற நித்திரையின் ஆழத்தில் அழுந்தும் இன்பக் குளுமை. வெள்ளை விழி மேட்டில் ஊசியால் கிறுக்கினாற் போன்று கிளைபிரிந்து தெறிக்கும் செந்நரம்புக் கொடிகள் தம் எரி குளிர்ந்து படிப்படியாய் அடங்கும் இதவு....

தூக்கம்தான் சுவர்க்கம்.

அரை மயக்கத்தில் விழிகள் செருகின.

வெயிலின் வெண்மையில் நேரமே உருகிக் கொண்டிருந்தது.

குடித்தனக்காரக் குழந்தைகள் மாடியில் ஓடியாடும் 'திடும் திடும்'.

அவள் கத்தக் கத்த, அதுகள் கீழே வந்து, பென்சிலும், கரிக் கட்டியிலும் சுவரில் கிறுக்கியிருக்கும் கோடுகள்.

சுவரில் படபடக்கும் ஷீட் காலண்டரில் தேதிகள்.

சமையலறையில் பூனை ஏதோ பண்டத்தை உருட்டும் ஒலி.

கொல்லை ரேழியிலிருந்து கிளம்பிவிட்ட மாமியாரின் குறட்டை.

கிணற்றடியில் பிடிசுவர்மேல், தொட்டி ஜலம் காட்டும் நிழலாட்டம்.

கொலுப் பெட்டியடியில் எலிகளின் ''கீச் கீச்'' சத்தம்.

கொடியில் புடவை.

உடலுக்கு நேர் காற்றில் மிதக்கும் மின்சார விளக்கு.

எல்லாம் தம்தம் தனித்தனி அடையாளங்கள் குலைந்து, ஒரே மொத்தாகாரமான உடைப்பின் பெருக்காய்த் தோன்றின. தன்னையழுத்தும் வயிறு கனம் தளர்ந்து,

தன் கனவுமிழந்து. இறகு இலேசில் தான் மிதப்பது காற்றிலா, தூக்கத்திலா?

இந்த நெகிழ்ச்சி நிலையில்தான் அந்தச் சத்தம் அவளை எட்டிற்று.

அது நேரிடையாய் வந்து அவள்மேல் மோதவில்லை. தான் உணர்ந்த இந்தப் பெருநுகலின் தொப்புளிலிருந்து இழை நூற்ற படி வெளிவந்து கொண்டேயிருக்கும் ஒரு நுட்ப ஓசை. காற்று தன்னைத்தானே கடைந்து கொள்ளும் ஒரு சுழிப்பு. வெளியேறிய மூச்சு, திரும்ப உள்ளுக்கு வாங்கும் வழி பிசகி, மிரண்டு, திசை தப்பித் தவிப்பது போல் ஒரு ரீங்காரம் விம்மிக் கொண்டே உள்வந்து கூடத்தில் இறுக்கி வட்டமிட்டது.

இப்போதெல்லாம் தன்னை அடிக்கடி வருத்தும் வாந்திக்கும் குமட்டலுக்கும் முன்னறிவிப்பாய், கண்ணிருட்டலில் காதின் 'கும்' படைப்பென்று முதலில் நினைத்தாள்.

இல்லை, தன் வயிறுதான் விசில் காண்கிறதோ?

தொப்புளைத் திருகிக் கொண்டு கிளம்பிய பயங்கரத்தில், மயக்கத்திலிருந்து வெடுக்கென விழித்துக் கொண்டாள்.

''ரொய்ங்ங்ங்—''

அவள் பயத்துடன் அவளைப் பிணைக்க, மேலும் மேலும் அவள் மேல் விழும் கயிறு போல் சத்தம் அவளைச் சுற்றிச் சுற்றி வளைத்தது. கண்களைக் கசக்கிக் கொண்டு முழு விழிப்பை அடையுமுன் அவளை விட்டகன்று வெளியேறி, எட்ட எட்ட ஒய்ந்து மறைந்தும் போயிற்று.

சே, என்ன கோரமான கனவு! அல்லது நினைவா? உள் பயத்தை வருவித்துக் கொண்டு சோம்பலை உதறி, வெடுக்கென்று எழுந்து, சுறுசுறுப்பாய் அலமாரிச் சாமான்களைத் தட்டிக் கொட்டியடுக்க ஆரம்பித்தாள்.

வெறும் நினைவேதானானாலும் அதன் அதிர்ச்சி வயிறு தொந்தது. அதிலேயே நினைப்பை ஓடாது தடுக்கக் காரியத்தில் முழு மனத்துடன் முனைந்து விட்டாள்.

சே, என்ன மனுஷரோ. கலைப் பிதேதான் கருத்தாய் அது என்ன வீம்போ? இவர் க்ஷவர செட்டைத் தான் அதன் இடத்தில் வைத்திருக்கிறேனே, என் குங்குமம், சாந்து, பவுடர், சீப்பு, கண்ணுடி மூலையில் இவருக்கு என்ன வேலே? எல்லாத்தையும் தலைகுப்புறத் தள்ளி, கீழே சிந்தி, மசியைக் கொட்டி — இந்த அக்கிரமம் எங்கே அடுக்கும்? கேட்டால் அதற்குத் தனியா ஒரு கோணல் சிரிப்பு. ''அதான் அடுக்காசுசி, நீ இருக்கியே!'' என்று ஒரு கிண்டல்.

அம்மாவும் பிள்ளையும் தங்களுக்குள்ளே ஆயிரம் பரிமாறிக் கொள்கிறார்கள், அடுக்கினதைக் கலைக்காமல் ஒழுங்காய் வைக்கக் கூடாதா? 'வேஷ்டி விளிம்பைச் சேற்றில் தோய்த்துக் கொண்டு வராமல் இருக்கக் கூடாதா?' என்று பிள்ளையை நான் ஒரு வார்த்தை கேட்டு விடக்கூடாதாம். தாளில் கயிற்றை அணைந்து, அதில் மத்தை மாட்டித் தயிரைக் கடைந்துகொண்டே பொருமுகிறார்.

''ஆமாம், அவன் தங்க கம்பிதான், கண்ணைக் குத்திக்கத்தான் குத்திக்கணும் போ! வா வா, இந்தச் சத்தத்தின் நேர்த்தியெல்லாம் கையில் ஒண்ணு ஏந்திண்டபின், இந்தக் கண்ணாலே, இந்தச் சதை வளர்ந்த கண்ணாலே பார்க்காமலா போகப்போறேன்! என்னை இன்னும் ரேழியில் தூக்கிப் போட்டுவிடவில்லை. அதுக்குள்ளே, சந்து மூலையில், பாசக் கயிறுடன் யமன் எனக்காகக் காத்துண்டும் இல்லே.''

''பாரேன், அழுகையா வரது. புஸ்தகங்கள் அத்தனையும் இப்பவே ஒரே மூச்சில் படிக்க முடிக்கடறும் போல்தான் ஒரே தோசைக் கடை—''





சேலம் ஸ்டீல் ப்ளவர் ஹைஸ்கூலில் ஜூலை 16-ந் தேதியன்று சேஷசாயி மெமோரியல் கட்டிட நிதிக்காக, மேட்டூர் கெமிகல்ஸ் லேடீஸ் கிளப் அங்கத்தினர்கள், ஸ்ரீமதி ஆனந்தி அவர்களின் 'மலைச்சாரல் மாதவி' என்ற சமூக நாடகத்தை நடித்தனர். நகைச்சுவை அரசு திரு கே. ஏ. தங்கவேலு நாடகத்துக்குத் தலைமை வகித்தார். நாடகத்தில் நடித்த பெண்கள் அனைவரும் இயற்கையாக நடித்துச் சபையோரின் பாராட்டுதல்களைப் பெற்றனர். நாடகத்தில் பங்கு கொண்டவர்களைப் படத்தில் காணலாம்.

---

சட்டெனக் கைகள் புத்தகங்களை ஏந்தினபடி, அடுக்களில் தடைப்பட்டு நின்றேன். அலமாரிக் கூரையில் கவர்கள் மூட்டு மூலையில் மண் கூடு கட்டியிருந்தது.

செவி ஆவி பறந்தது. கையில் என்ன கிடைத்ததென்று கூடப் பார்க்க வில்லை. அது கோணி ஊசியோ, கொண்டை ஊசியோ, நீள ஆணியோ, ஒடிசல் கம்பியோ-ஆத்திரத்துடன் சுரண்டி, ஒரு துண்டுக் காகிதத்துள் தள்ளி, வாசலுக்குக் கொண்டு போனான். அவனுக்கென்றே காத்திருந்தாற் போல், எதிர்க் காற்று, திட்டாய்க் கிளம்பி, கைக் காகிதத்தைப் பிடுங்கி அவள் மேலேயே கேலியில் வீசி மறைத்தது.

அருவருப்பில் உடல் குலுங்கிற்று. கண்ணைக் கசக்கிக் கொண்டு நின்றான். விழியோரங்களில் கோபக் கண்ணீர் உறுத்திற்று. கோபம், அவமானம், அலுப்பு, யார் மேலும் எதன் மேலும் நியாயமற்ற, பயனற்ற சீற்றம் எல்லாம் ஒருங்காய் அவளை அழுத்தின.

இப்படிக் கையாலாகாமல் போய்விட்டேனென்று காற்றுக்குக்கூட எளக்காரமாய் இருக்கிறேன். நான் யாருக்குத்தான் மதிப்பு?

ஆனால் இந்தக் கீழ் வாடைக் காற்றுக்கு இன்று என்னதான் குஷியோ? மேலும் மேலும் அவள் மேல் அலைமோதிற்று. துகில் உடலின் மேடு பள்ளங்களில், சிதறிய முகில் போல் ஒட்டிக் கொண்டது. கூந்தல் கலைந்து நெற்றி ஓரங்களிலிருந்து பிரிகள் தப்பி முகத்துள் மோதி அலைந்தன. அவைகளை ஒதுக்கக் கைகளைத் தூக்குமுன் காற்று மேலாக்கைத் தோளிலிருந்து பிடுங்கிற்று.

"யார் என்னைப் பற்றி என்னவேணுமானாலும் நினைத்துக் கொள்ளுங்கள். எனக்கு யாரைப் பற்றியும் மதிப்பில்லை. எவர் ஆத்திரமும் என்னை ஒன்றும் பண்ண முடியாது. தெரியுமா? என் இச்சையின் மிச்சம்தான் எல்லாம், தெரிந்ததா? என் சீண்டலை உன்னைக் கொண்டவன்கூடத் தடுக்க முடியாது. தெரிந்ததா? ஹோஹ்ஹோ!" என்று கேலியாடிற்று.

தெருவில் ஒரு கோழி தன் குஞ்சுகள் புடைசூழச் சென்றது. இரை தேடலில் நொடிக்கு நொடி அதன் கழுத்து ஒயிலாய்க் குலுங்கிற்று. அலகு நாசூக்காய்க் குப்பையைக் கிளறிற்று.

காற்றின் அலைப்பில் ஒன்றிரண்டு குஞ்சுகள் உருண்டன. தாய் அலறி அவைகளை அணைக்கச் சிறகுகளை விரித்தபடி அதன் முன்னிரண்டடியிலிருந்து குலுங்கக் குலுங்க வேகமாக ஓடோடி வந்தது.

ஒரு நிமிடம் அந்தக் காட்சியில் தன்னை மறந்து நின்றாள். திடீரென்று அவளுக்குத் தோன்றிற்று. தாய்க் கோழியின் சிறகின் மேல் வெறித்த பார்வையை அங்கிருந்து பெயர்க்க முடிய வில்லை என்று. உடல் இமை நேரத்தில் பாதி நேரம் அற்புதமான அமைதியில், சொட்டாய்த் துளும்பி நின்றது. அடுத்தாற்போலேயே புயல் புகுந்தது.

மேலே தண்டவாளம் விழுந்தாற் போன்று வலி, திடீரென்று விலாவை முறித்தது. நிலைவாசலின் மேல் சாய்ந்தபடியே சரிந்து குன்றி, இரு கைகளாலும் இடுப்பைப் பிடித்துக் கொண்டாள். உடல் இடுப்புக்கு மேல் இடுப்புப் பூட்டில் மத்துக் கடைந்தது. முகத்தில் வேர்வை கொப்புளித்தது.

"ரொய்ங்ங்ங்—"

எட்டு விமானங்கள் அணிவகுத்துப் பறந்தாற் போல், மறுபடியும் காதைப் பொளியும் அதே ரீங்காரம். வலியில் மலர்ந்த விழிகள், மேனோக்கி ஆகாயத்தில் விமானங்களைத் தேடின. ஆனால் அங்கு நீலம்தான் வெறிச்சிட்டுத் துலங்கிற்று.

மேலும் மேலும் அந்த வெண்கல நாதம் அவள் மேல் கூடு பின்னி அவளை மூடிற்று.

"அம்மா!"

கொண்டையில் அலறல் உருக்கூட்ட முழு வேகத்துடன் முயன்றதுதான் அறிவாள். உடனேயே நினைவு தப்பி விட்டது.

✲

தும்பை வெள்ளை தரித்துப் பால் ஒழுகும் சிரிப்புடன் உருவங்கள் வளைய வருகின்றன. அவள் கை நாடியை ஒரு நர்ஸ் பற்றுகிறாள். ஒருத்தி ஒரு 'பேஸினை'த் தூக்கிக் கொண்டு வருகிறாள். அதனின்று ஆவி பறக்கிறது. இன்னொருத்தி, நீலக் காகிதத்துள் சுருட்டிய பஞ்சுடன் வருகிறாள்.

திடீரென ஒரு வீறல். பக்கத்தறையிலா, நான்தானா? வலியின் மீறலில், தன் வலியா, பிறர் வலியா, யார் வலி என்றுகூடக் கண்டு கொள்ள முடியவில்லை. இது பூமியின் வீறல். தன்னுள் நேர்ந்து கொண்டிருக்கும் பூகம்பம். இதில் நான் உயிரோடிருக்கிறேனா, செத்து விட்டேனா? செத்து விட்டால் எங்கிருக்கிறேன்? மறுபடியும் அலறத் திறந்த வாயிலிருந்து அவள் கத்தலைப் பிடுங்கிக் கொண்டு "வ்றீச்"சென்று ஒரு புதுக் குரல் கிளம்பியது.



பம்பாய் பிரின்ஸ் ஹோட்டலில் இந்திய அமெரிக்க சங்கத்தினர் அமெரிக்கத் தூதர் ஜான் கென்னத் கால்பிரெய்த்தை வரவேற்றுக் கௌரவித்தனர். அமெரிக்க கான்சல் ஜெனரல் ராபர்ட் எம். கார், ஸ்ரீமதி கால்பிரெய்த், எச். பி. மோடி, கவர்னர் ஸ்ரீபிரகாசா, தூதர் கால்பிரெய்த், ஜி. எல். மேத்தா ஆகியோரைக் காணலாம்.

---

"இதோ, கண்ணைத் திறந்து பாரம்மா! ஆணைத்தான் பெத்துக்கிட்டே போ! தொடையிலே மச்சம் பாரு! ரொம்ப அதிர்ஷ்டம்!" அவள் குழந்தையைப் பார்க்கக் கூடவில்லை. குஞ்சுக் கைகளும் பஞ்சு வாயும் மார்பில் அழுந்தியதுமே பரவசம் தாங்காது, மூர்ச்சையாகி விட்டாள்.

**இருவரும் ஒருவரையொருவர் 'முகம் காணாமலே ஒருவரில் ஒருவர் கலந்து இருந்தோம். இருவர் பிரிவின் ஒருமித்த உச்சரிப்பாய் சேர்ந்து விட்டேன்.**

திடுக்கென விழித்துக் கொண்டாள். கால் மாட்டில் கட்டிலோடு கட்டிய தொட்டிலில் குழந்தை உறங்கிக் கொண்டிருந்தது.

செவியண்டை வந்து ஓதியது யார்? உடல் புல்லரித்தது. அச்சொற்கள் நெஞ்சின் அடிவேர்களில் ஓடி ஒளிந்து விளையாடும் இன்பம் தாங்காது மார்பு மடையுடைந்து திரும்பத் திரும்பப் பெருக்கெடுத்தது.

மறு நாள் காலையில்தான் அவள் கணவன் காப்பியுடன் வந்தான். அவன் வரும்போது அவள் குழந்தையை அணைத்துக் கொண்டிருந்தாள். அவனைக் கண்டதும் குழந்தையை அவனிடம் பெருமகிழ்ச்சியுடன் நீட்டினாள். அவள் கண்கள் ஒளி வீசின.

"இருவர் பிரிவின் ஒருமித்த உச்சரிப்பாய் நேர்ந்திருக்கும் நம் செல்வனைப் பாருங்கள்."

"ஏதேது, குழந்தைக்குக் கொசுராய்க் கவிதையும் பிறந்திருக்கிறாற் போலிருக்கிறது......!"

"ஏன், கையில்தான் வாங்குங்களேன்! தொட்டால் ஒட்டிக் கொள்ளுமா? அப்படியே ஒட்டிக் கொண்டாலும் வீட்டுக்குப் போய் ஸ்நானம் பண்ணினால் போகிறது!"

அவன் ஏந்தலில் குழந்தை கையையும் காலையும் முறித்து, பெரிதாய்க் கொட்டுவாய் விட்டது. பால் மயக்கம்.

அவன் முகத்தில் இலேசாய் அருவருப்பின் ரேகை நெளிந்தது. புழு! புழு! இது வரும் என்று நினைத்தேனா? வரணும் என்று வேண்டினேனா? அவள் கண்கள் இமைப்பில் சலித்தன.

"நான் தொடும் வேளை வர இன்னும் நாள் இருக்கிறது. என்ன, இதற்கு வாய் இப்பவே உன்னைவிடப் பெரிதாகக் கிழியும் போலிருக்கிறதே...!"

"ஏன் உங்களுக்கு வாய் சின்னதோ? அந்தக் குடமிளகாய் மூக்கைப் பாருங்களேன், எல்லாம் உங்கள் அச்சுத்தான்!"

"பின்னென்னே, உன் மாதிரி ஜடாயுவாய் இருக்கணுமா?"

"என் மூக்குக்கென்ன?" தன் மூக்கை ஒரு தடவை இழுத்துப் பார்த்துக் கொண்டாள். "மூக்குக்கு என்னைக் கொண்டிருந்தால் எல்லாம் நன்றாய்த்தான் இருக்கும்!"

"அப்போ இப்போ நன்றாயில்லையா?"

அவள் முகம் விழுந்தது. தொடப் பிடிக்கவில்லை; ஆனால் தன் மூக்கை அவன் செய்யும் கேலி குழந்தையையும் தாக்குவது பொறுக்கவில்லை. அவன் நெஞ்சு நலிவைக் கண்டு கொண்டுதானோ என்னவோ அவன் புன்னகை புரிந்தான்.

"காக்கைக்கும்......"

"காக்கை யார்? எப்படியும் நிறம் உன்னை விட நான் ஒரு மாற்று கூடத்தான்."

"இருந்துக்கோங்களேன்! அதுவும் என் பெருமைதான். எப்படியிருந்தால் என்ன? கறுப்போ, சிவப்போ நம்முடையது நமக்கென்று ஒண்ணு...." எனப் பெருமூச் செறிந்தாள்.

அவன் அப்படிச் சொன்னதும் அவள் முகத்தில் ரத்தம் குபுகுபுத்து முகம் செந்தழலாகியது. அவள் கையை அவன் கை பற்றியது. மூச்சுத் திணறிற்று.

"நான் .. நான் .. நீ .... நீ .. சின்ன உயிர், பெரிய உயிர் இரண்டிலும் இப்போ நீதான் எனக்கு முக்கியம்."

நெஞ்சத்தின் தந்திகள் எப்படியெல்லாம் அழுங்குகின்றன! என்னென்னவெல்லாம் பேசுகின்றன.

அவள் மடியில் சின்ன உயிர், அங்கங்களை அசைத்து, கழுத்தை முறுக்கிக் கொண்டது. அதன் முகம் ஜன்னலின் வெளிச்சத்துக்குத் திரும்பியது. கறுகறுவென மயிர் அடையாய் நெற்றியில் வழிந்தது. நிலைபெறாத வெறிச்சிட்ட பார்வையில் இமையின் சிறகுகள் அகன்றன. வெளியே கவிந்த வானத்தின் நீலத்தில்



தஞ்சாவூர் பாணியில் பரதநாட்டியமாடிப் பம்பாய் மக்களின் மனம் கவர்ந்த குமாரி சுதா துரைசாமி சமீபத்தில் சென்னையில் மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபையிலும், தியாகராய நகர் கிருஷ்ண கான சபையிலும் நடனமாடிச் சென்னை ரஸிகர்களைப் பரவசத்திலாழ்த்தினர். இவர் பரதநாட்டிய வித்வான் திருவிடைமருதூர் குப்பையா பிள்ளை, பம்பாய் ராஜ ராஜேசுவரி பரதநாட்டிய கலாமந்திரத்தைச் சேர்ந்த திரு ஏ. டி. கோவிந்தராஜ பிள்ளை, திரு டி. கே. மகாலிங்கம் பிள்ளை, திரு டி. கே. கல்யாண சுந்தரம் ஆகியோரிடம் நடனம் பயின்றவர்.

---

கடுகளவு வழித்துத் தீட்டினாற் போல் விழிகளின் பொறி நீலம், வெளி நீலத்தை அடையாளம் கண்டுகொண்டதோ என்னவோ, குழந்தை அந்தப் பக்கம் திரும்பியபடியே, உறக்கத்தில் ஆழ்ந்தது.

உறக்கம், விழிப்பு, சின்ன உயிர், பெரிய உயிர், நீ, நான், — வித்தியாசங்கள் எதுவும் அதற்கு இப்போதைக்குத் தெரியாது.

அது உறங்குவதைப் பார்த்தபடி இருவரும் தம்மை மறந்தனர்.

அது குழந்தையா? அவர்கள் குழந்தையா?

❋

**யா**ரோ தோளைப் பிடித்துக் குலுக்கினாற் போல் திடுக்கென விழித்துக் கொண்டாள். தூக்க அயர்வில், வேளையின் மந்தாரம் மாலையா, காலையா தெரியவில்லை. ஆஸ்பத்திரியினின்று வந்தாயிற்று. ஆறுதல் பெற்ற சிரமம் இன்னும் தீரவில்லை. சுமந்தபோது இழந்த தூக்கம் சுமை இறங்கியதும் வட்டியோடு வந்தது.

பூம்ரொய்ங்ங்ங்—

கவர்களுக்கும் உயிர் உண்டோ? தனக்கு நரம்புகள் அனைத்தும் அயர்ந்திருக்கும் இந்தச் சமயத்தில்தான் கவர்களுள் துடிக்கும் அவைகளின் உயிர்த் நாது கேட்குமோ? பூமியின் உயிர்ப்பு, படுக்கையைத் தாண்டி முதுகுத் தண்டில் விறுவிறுப்பதுபோல் தோன்றிற்று. பீதி பற்றிக் கொண்டது. எழுந்து உட்கார்ந்தாள். சத்தம் அலமாரியிலிருந்து வந்தது. அலமாரிக் கூரையில் கவர்கள் முட்டு மூலையில் மொய்த்துக் கொண்டிருந்த இடத்திலிருந்து அது புறப்பட்டுக் கொண்டிருந்ததை அப்போதுதான் கண்டாள். பீடரி சிலிர்த்தது. அவளைக் கவ்விய பயத்தின் கண்ணிருளில் அதன் உரு பனிச்சென்று பிதுங்கிற்று.

பெரிதும் சிறிதுமாய் ஒட்டிக் கொண்ட இரண்டு ரத்தச் சொட்டுக்கள். தலையும் உடலும் சிவப்புக் குரூரத்தில் தெறித்த கணுக்கள். பிய்ந்த சரிகைத் துணுக்குகள் போன்ற சிறகுகளின் கனவேகத்தின் விறைப்பு. அதன் நடுவே அந்தரத்தில் **அது** அலை மிதந்தது. வளைந்த கொடுக்குகள். முகத்தினின்று துருத்திக் கொண்டு நின்றன. ரம்பத்தினின்று உதிரும் மரத் தூள் போல், அதன் ரீங்காரம் துருவிக் கொட்டும் தொனிப் பொடி மேலும் மேலும் அவள் மேல் சொரிந்து அவள் உருமழுங்கிய பிண்டமாய்த் தன் இடத்தில் ஒடுங்கினாள்.

மீண்டும் ஒரு சக்கரம் அடித்துவிட்டு, அது ஜன்னல் வழி வெளியே சென்று விட்டது. அந்தச் சத்தம் தூரத்தில் ஓய்ந்த பின்தான் அவளுக்கு உயிர் திரும்பிற்று.

அலமாரியில் அதற்கென்ன வேலை? தேன்சீசாவை மூட மறந்துவிட்டேனா?

எழுந்து பார்த்தபின்தான் தெரிந்தது. அலமாரி மூலையில் சிரங்கு போல் முடிச்சிட்டுக் கொண்டு மண்கூடு படர்ந்திருந்தது. அருவருப்பின் சிற்றம் திருதிருவென மண்டைக்குப் பாய்ந்தது. உச்சி மண்டையுள் நரம்புகள் தீய்ந்து கருகும் நெடியில் மூக்கு நுனி துடித்தது. அந்த அருவருப்பைக் காட்டிலும் பயங்கரம் ஒன்று நினைவில் புரண்டது.

குழந்தை!

ஒரு காகிதத்தைத் தேடி அலமாரியில் அவர் சாமான்களுடன் அடுக்கியிருக்கும் பேனாக் கத்தியால் நெம்பிப் பெயர்த்து, காகிதத்துள் தள்ளினாள். மண் இலேசில் கழலவில்லை. கெட்டித்துப் போயிருந்தது. அடையாளம் அழியும் வரை சுவரை நன்றாய்ச் சுரண்டித் தூளையும் காகிதத்தில் சேர்த்தாள். ஜன்னலுக்கு வெளியே கொட்டுகையில் ஜன்னல் சிம்பியில் கைபிடித்து, கூட்டின் சில்கள் இழை சிதறின. அவைகளினூடே ஒரு பச்சைப் புழு நெளிந்தது. வயிற்றைக் குமட்டியது.

"என்ன பண்ணறே?"

தூக்கிப் போட்டது. திருட்டில் கையும் களவுமாய் அகப்பட்டுக் கொண்டாற்போல் திருதிருவென விழித்தாள். ஒரு வேளை அலமாரிச் சாமான்களையெல்லாம் நான் இன்னும் தொடக்கூடாதோ?

"ஒண்ணுமில்லேம்மா, அலமாரியில் செல்லு கட்டியிருந்தது அதை—"

"செல்லா? குளவிக் கூடுன்னு அது? அட, ராமா, என்ன பண்ணினே? அழிச்சுட்டயா?"

''ஆமாம்!'' அழித்தால் என்ன? இந்த வீட்டில் தொட்டதற்கெல்லாம் சாட்சிக் கூண்டுதானு? கன்னங்கள் குறுகுறுத்தன.

''ஆமாவா? யாராவது குளவிக் கூட்டைப் போய் அழிப்பாளா? வீட்டில் குளவி கூடு கட்டினுல் வீட்டுக்கே நல்லதுன்னு உனக்கு யாரும் சொல்லித் தந்ததில்லையா? கிராமத்திலிருந்துதானே வந்திருக்கே? பேரன் பிறந்தான், கூடவே குளவியும் கட்டியிருக்குன்னு மகிழ்ந்திண்டிருந்தேன்.. நீ வீட்டுக்கு வந்ததும் வராததுமாய் உன் சுத்தத்தைக் கொண்டாட ஆரம்பிச்சுட்டாயாக்கும்—துடைச்சுப் பெருக்கற சுத்தத்தை!''

''சுத்தத்துக்கில்லேம்மா, குழந்தையைக் கொட்டி விட்டால் என்ன செய்கிறது?''

''ஏன்டி, பெண்ணே! நீ கிராமத்திலிருந்துதானே வந்திருக்கே? உன் ஊரிலே மனிதர்கள் வீட்டில் வாழும் பாம்போடு குடித்தனம் பண்ணலியா? அது உன்னே என்ன பண்ணித்து? நாமே நல்லதுக்குப் பிறந்தவா வில்லே. இந்தக் கண் இன்னும் என்னென்ன அக்கிரமங்களைக் காண இருக்கோ! இந்தக் கூட்டை, பூச்சி பொட்டிலிருந்து யார் யார் சாபத்தை வாங்கிக் கட்டிக்கணும்னு இருக்கோ—''

பயம் வயிற்றுக்குள் பனிக்கட்டி போல் திரியாயிறங்கிற்று. தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை வாரிவிறுகக் கட்டிக் கொண்டாள். அதன் அழுகுரல் அவளுக்குத் தேவையாக இருந்தது.

❋

அதன் வருகையை அதன் வெகு தூரத்திலேயே அறிந்து கொண்டாள். அதன் வருகைக்கு, தீர்ப்பின் விதிப்புக்குக் காத்திருக்கும் கைதி போல் காத்திருந்தாள்.

கதவுகளைத் திறந்து வைத்தால் கூடம், மூடி விட்டால் அறை. அதிலும் மர 'ஸ்கிரீன்' நிறுத்திப் பாதியிடம் தடுத்த ஒதுக்கம். குறிப்பிட்ட வேளைகளில் குறிப்பிட்ட உணவு. குடிஜலம்கூட அளந்துதான். தடுத்த இடம் தாண்டி நகர முடியாது. அவள் சிறைதான் இருந்தாள்.

இன்றைக்கென்று விடிவிளக்கு வேறு 'மக்கர்' பண்ணிற்று. நாணின் அதிர்வுடன் அது உள் நுழைந்ததும் விளக்கு குப்பென்று அணைந்து போயிற்று.

கும்மிருள்.

ரீங்காரம் வெள்ளமாய்ப் பெருகி இருளை நிறைத்தது.

குழந்தை மேல் பலமாய்த் துணியைச் சுற்றி இறுக அணைத்தபடி இருளில் ஓசைச் சுழல் வழியே முகம் திரும்பித் திரும்பி, தான் இழைத்த பழிக்கு என்ன நேரப் போவது என்று அறியாமல், என்ன நேரினும், குழந்தையை விட்டுத் தனக்கு என்ன நேரினும் நேர்வதற்குக் காத்திருந்தாள். எது நேரினும் அது சம்மதமே; நியாயமுமே. அவள் இழைத்த பழியே உருவாய்ப் பிதுங்கி, முகம் கூட்டு அவளைத் தேடுகிறது.

இருளில் கண்கள் தொடர முடியா அந்த ஓசையின் வளைவுகளை, வளைவுகளின் நுட்ப அழகுகளை, செவி எப்படிப் பனிச்சென்று பார்க்க முடிகிறது. பருக முடிகிறது! தம்பூரை மீட்டினுற் போன்ற உருகோசையில் நினைவு ஒன்றுபட்டு அந்தத் தேடலின் தவிப்பில் நெஞ்சு மூங்கி மூங்கி எழுகையில், தன் தன்மையே துலங்கித் தவிப் பரவசமடைந்தாள். தானும் அத்துடன், அதன் தேடலோடிழைந்தாள்.

கோபங்கள், கோபங்களின் அடிவாரமாம் பயம், பயத்தை மறைக்கத் தைரியம், தைரியத்துக்கு அலங்காரமாய்ச் சிரிப்பு, பீதிகள், பொய்ம்மைகள், சத்தங்கள், அசுத்தங்கள், அருவருப்புகள் யாவும் தடம் தடமாய்ச் சட்டையுரிந்து சுற்றி உதிர்ந்த சருகுகளின் நடுவே ஒன்று-ஒருணர்வுதான் நெருப்புத் துண்டாய்த் தனித்து நின்று சூழ்ந்த இருளை எரித்து நெஞ்சுகள்—எங்கென்று தெரியவில்லை-ஏதோ ஓர் இடத்தை-எவ்வளவு பெரிதென்று தெரியவில்லை, எவ்வளவோ பெரிது-ஒளிமயமாக்கிற்று.

''பூம்ரொய்ங்ங்ங்''—

இது தன் கூட்டை இழந்த வெறும் குளவியின் கூவல் அல்ல. பூமியின் ஆதார சுருதி. தானும் சுற்றிக் கொண்டு தன்னையும் சுற்றிக் கொண்டு, சின்ன உயிர், பெரிய உயிர், தாயின்று புழு வரை தான் தாங்கும் எவ்வுயிரும் தன்னேடு சுற்றிக்கொண்டு, தான் தேடுவது இன்னதென்று அறியாத திகைப்பில், பூமியின் ஓயாத இயக்கத்தின் ஏக்கம்.

அந்த அடிப் படுகையில் அவள் தோய்ந்ததும் அதற்கென்றே, அவளுக்கென்றே காத்திருந்தாற்போல், அங்கிருந்து, அவளிலிருந்து அவளைப் பட்டை யுரித்தாற் போன்று ஒரு விறல் புறப்பட்டது.

அலறிப் புடைத்துக் கொண்டு மாமியாரும் தாயாரும் ஓடி வந்தனர்.

மாடியில் 'திடும் திடும்'.

அக்கம் பக்கத்தில், எதிரே, வாசலில், கூட்டமாய்க் குரல்கள். யாரோ கூடத்து 'ஸ்விட்சை'ப் போட்டனர்.

கண்களை இறுக மூடியவாறு, உட்கார்ந்த நிலையிலேயே, அவள் உடல் மருள் கண்டாற் போல் ஊஞ்சலாடிற்று. மடியில் குழந்தை நிம்மதியாய் உறங்கிக் கொண்டிருந்தான்.

அவள் கணவன் அவளைத் தோளைப் பிடித்து உலுக்கி அதட்டினுன். அவனுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. கோபம் கோபமாய் வந்தது. மானம் போகிறது.

ஆனுல் அவள் கனவு கலையவில்லை. அவள் கனவில் அவள் என்ன கண்டாளோ, புன்னகையில் கன்னங்கள் குழிந்தன. முகம் ஒளி விரிந்து. வாய் குழறிற்று. அவளுக்குச் சம்பந்தமற்றவை போல், தாம் ஒலிப்பட அவளை உபயோகம் கொள்வது போல் வார்த்தைகள் வெளிவந்தன.

''சின்ன உயிராம், பெரிய உயிராம்! எல்லாம் ஒருயிராம் பேருயிரின் பரவல்!''

அவள் வலது கன்னத்தில் முத்திரை பொறித்தாற் போன்று, சிவப்பாய் இரண்டு பதிவுகள் தெரிந்தன.



# படித்துப் பாருங்கள்



## ஆற்றங்கரையினிலே

தமிழகத்திலே உடலைத் தூய்மைப்படுத்த ஆற்றுக்குச் செல்வோர் உள்ளத்தையும் தூய்மைப்படுத்திக் கொள்ளும் பொருட்டு ஆற்றின் மருங்கிலே சைவ — வைணவ தேவாலயங்கள் எழுப்பினர் நம் முன்னோர். அத்திருப்பதிகளுள் பல சைவ சமய குரவர்களாலும், வைணவ ஆழ்வார்களாலும் பாடல் பெற்றுப் புனிதமடைந்தன. அப்பெரியோர்களால் தரிசனம் செய்யப் பெற்ற பதிகளுக்குச் சென்று இறைவனைத் தரிசிப்பதே வாழ்க்கையின் பெரும் பேறு என்று கருதுவோர் நம்மில் பலர். ஆனால் அத்தகைய பேறு எல்லாருக்கும் கிடைக்கும் தகைமையதா? இல்லை. ஆனால் நமது பேராசிரியர் திரு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களது ஆற்றொழுக்கன்ன தமிழ்நடை மூலம் பொன்னி, பொருநை, கொள்ளிடம், பாலாறு, வைகை, கங்கை, கோதாவரி முதலிய எல்லா ஆற்றங்கரைகளிலே அமைந்துள்ள நாற்பத்தெட்டு திருப்பதிகளுக்கும் வீட்டிலிருந்தபடியே போய் வந்து விடலாம்.

ஆங்காங்கேவரும், அப்பர், சுந்தரர், கம்பர், சங்கப் புலவர்கள், வீரமாமுனிவர் முதலியோரின் மணி மணியான தமிழ்ப் பாடல்கள் படிக்கும் இன்பத்தைப் பன்மடங்காகப் பெருக்குகின்றன.

மேற்கண்ட கட்டுரைகள் கல்கியில் வெளியானபோதே பல்லாயிரக்கணக்கான வாசகர்கள் படித்து இன்புற்றார்கள். இக் கட்டுரைகளைப் புத்தக வடிவில் என்று காண்போம் என்று கேட்ட வண்ணம் இருந்தார்கள். அவர்கள் குறை இப்பொழுது தீர்ந்து நிறைவு பெற்று விட்டது.

பிரசுரம்: பழனியப்பா பிரதர்ஸ், சேப்பாக்கம், சென்னை — 5; தெப்பக்குளம், திருச்சி — 2; விலை: ரூ. 5.

## ஸாமவேதஸர்வஸ்வம்

'வேதானாம் ஸாமவேதோஸ்மி: வேதங்களுள் நான் ஸாம வேதமாயிருக்கிறேன்' என்று கண்ணன் கீதையில் கூறுகிறான். ஸாமவேதத்திலுள்ள கருத்துக்களின் ஆழத்தைக் காண முடியாத விடத்தும், நல்ல ஸாமகானத்தைக் கேட்கும்போது மந்திரத்தின் சக்தியாலும் ஸப்த ஸ்வரத்துடன் கூடிய தெய்வீக கானத்திலிருந்து எழும் ஆனந்தானுபவத்தாலும் மெய்மறந்து வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத ஆண்டவனுடைய திருவடிகளை மார்புடன் அணைத்துக் கொண்ட இன்பம் பிறக்கிறது என்பதை உணர்ந்தவர் இப்போதும் பலர் இருக்கின்றனர். கேட்போர் உள்ளத்தை மிகுதியும் கவர்ந்ததால்தான் ஸாமவேதம் ஒருகாலத்தில் ஆயிரம் சாகைகள் அல்லது கிளைகள் உடையதாயிருந்திருக்கிறது. அப்படிப்பட்ட வேதத்தில் இப்போது இரண்டு மூன்று சாகைகள்தான் காணப்படுகின்றன. அதிலும் தென்னாட்டில் பிரசாரத்திலிருப்பது கௌதும சாகையாகிய ஒன்றுதான். அதிலுள்ள மந்திரங்கள், அவற்றை வாழ்க்கை முறையில் பயன்படுத்திக் கொள்வதற்கு வழிகாட்டும் தர்ம சூத்திரங்கள், பிரயோக முறைகள் ஆகியவற்றைத் தமிழில் மொழி பெயர்த்து இந்நூலாசிரியர் அளித்துள்ளார். 'ஸாமவேத ஸர்வஸ்வம்' என்ற பெயருக்கிணங்க, ஸாமவேதத்தைப் பற்றிய அறிவை, எழுபது அரிய துணைநூல்களின் ஆராய்ச்சியின் பயனாக இந்நூலில் சுருக்கியும் விளக்கியும் தந்திருக்கிறார் மாயூரம் வேதாந்த சிரோமணி ம. ராமநாத தீக்ஷிதர். — அண்ணு

பிரசுரம்: காமகோடி கோசஸ்தானம், 4 பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, மதராஸ்—1. விலை: ரூ. 5—0.

## குதிரை மணிமாலை

ஈழத்துக் கவிஞராகிய திரு. பரமஹம்ஸ தாஸன் கதிர்காமத்து முருகன் மேல் பாடிய பாடல்கள் தொகுக்கப் பெற்ற தொகுதி இது. சாதனை முதிர்ச்சியும், பக்தியும் பொருந்தியவராகிய ஆசிரியர் தம்முடைய கவிதைகளிலும் அவை பொருந்திவரப் பாடியுள்ளார்.

அருள் நயம், கவிநயம், இனிமை யாவும் இணைந்த குதிரைமணி மாலையை முருகன் அடியார்கள் விரும்பிக் கற்று மகிழ்வார்கள்.

வெளியீடு: ஆத்மஜோதி பதிப்பகம். நாவலப்பிட்டி, இலங்கை; விலை: 50 சதம்.

## குரு கோவிந்த சிங்கன்

பஞ்சாப் நாட்டுச் சீக்கியர்களின் கிளர்ச்சிகளை, மிகக் கடுமையான அடக்குமுறைகளைப் பிரயோகித்து இந்திய சர்க்கார் ஒடுக்க முயற்சி எடுக்கின்றனர். அவ்வளவு கஷ்டங்களையும் தாங்கி அனுபவித்து விட்டு, மீண்டும் வீரத்தோடு அவர்கள் கிளர்ந்தெழும் காட்சியைக் கண்டு வியக்காதவர்கள் யார்? இந்த வீரம் பாரத நாட்டில் எந்தப்பகுதியிலுள்ள மக்களிடத்திலும் காணக் கிடைக்கவில்லையே என்று அதிசயிக்கிறோம் அல்லவா?

அதற்குக் காரண புருஷர் யார் என்பதை முப்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் வ.வே.சு. ஐயர் ஓர் அருமையான நூல் இயற்றி விளக்கி விட்டுப் போயிருக்கிறார்கள். குரு கோவிந்தனது வரலாறு வீரமும் துயரமும் நிறைந்ததாகும். எவ்வளவு கஷ்டம் வந்தபோதிலும், அஞ்சாநெஞ்சுடன் அவன் நடத்திய வாழ்க்கை மெய்சிலிர்க்க வைப்பதாகும்.

பிரசுரம்: அமுதநிலையம், தேனாம்பேட்டை, சென்னை — 18. விலை: 50 ந.பை.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor, T. Sadasivam.

# நாளொரு மேனியாய்

# சரும எழில் மேம்பாடு

## புதிய ரெக்ஸோனு துணையோடு

ரெக்ஸோனு சோப்பின் மிருதுவான நுரையில் அடங்கியுள்ளது கேடில்-எழிலூட்டும் பற்பல எண்ணெய்கள் இணைந்த விசேஷத் தைலமான கேடில் சருமத் திரளூடே சென்று, அதை மென்மையுடனும், மழமழப்பாகவும் மினிரச் செய்து.... உங்கள் மேனி வனப்பை ஓங்கச் செய்கிறது. எடுப்பான நறுமணத்தினுல் உங்களை மணிக்கணக்கில் புது மலர்ச்சியுடனிருக்கச் செய்கிறது. உங்கள் அன்றாட அழகுசாதனத்துக்குகந்தது ரெக்ஸோனு.




புதிய மேலுறை, புதிய வடிவழகு, புதிய பச்சை வர்ணம் ஆகியவற்றோடு கூடிய புதிய ரெக்ஸோனுவை நீங்கள் விரும்புவீர்!

**புதிய ரெக்ஸோனு—**
**உங்கள் சருமத்திற்கு அனுகுணமானது**

RP. 169-X52 T.M

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# வாடாத இளமையழகு
# வாராதோ விரலசைந்தால்!

மேனி யெழிலைப் பராமரிப்பதே உங்களுக்கழகு! இளமை மாறாத மெருகுடன் மின்ன ஹிமாலயா புக்கே ஸ்நோ உபயோகியுங்கள். சோர்வுற்று வரண்ட சருமங்கூட துளிர்த்திடும் புதுமலர்ச்சியோடு தளதளப்புடன் விளங்கக் காண்பீர்கள். வெயில், புழுதிக் காற்று ஆகியவற்றிலிருந்து மேனி யெழிலைக் காப்பதோடு, முகப்பருக்களும், கருக்கல்களும் வாராமல் தடுக்கிறது ஹிமாலயா புக்கே ஸ்நோ. உங்கள் மேனி யெழிலுக்குத் தக்க பராமரிப்பு அளியுங்கள். இளமை மாறாத அழகைக் கொஞ்சிவளைப்பது....




## ஹிமாலயா புக்கே ஸ்நோ






HBS. 22-30 TM